“லக்ஸ் டாய்லட் சோப் என் சருமத்தை மிகவும் அழகாக வைத்துக் கொள்கிறது”

என்று சொல்கிறார்

*லலிதா*

இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தை வசீகரமாகச் செய்யும்!




சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 290-X30 TM

# எதிர்பாருங்கள்!




# ஸ்த்ரீஸாகஸம்

ஆந்திரதேசம், ஸீடெட், சித்தூர்,
நைஸாம், வட இந்தியா தவிர

பூரண உரிமையாளர்:

**பெல் பிக்சர்ஸ்** மதராஸ்

தமிழ்

# சர் தியாகராயா காலேஜ் நிதிக்காக

## மகத்தான இசை, நாடக, நடன நிகழ்ச்சிகள்!

★

மதராஸ், வண்ணாரப்பேட்டை சர் தியாகராயா
காலேஜ் மைதானத்தில் அமைக்கப்பட்டுள்ள

## தியாகராயர் மண்டபத்தில்

**10-8-51 முதல் 23-8-51 வரை**

★

| | | | |
|---|---|---|---|
| 10-8-51 | இசைவாணர் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் | — | பாட்டு |
| 11-8-51 | ஸ்ரீ பி. ஆர். பந்துலு,<br>ஸ்ரீ கே. சாரங்கபாணி & பார்ட்டி | — | "வரதக்ஷிணை"<br>நாடகம் |
| 12-8-51 | ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கம் & பார்ட்டி | — | "நாம் இருவர்"<br>நாடகம் |
| 13-8-51 | ஸ்ரீ சி. என். அண்ணாதுரை, M.A. & பார்ட்டி | — | "நீதிதேவன் மயக்கம்"<br>நாடகம் |
| 14-8-51 | ,, ஷை ,, | — | "சந்திரமோஹன்"<br>நாடகம் |
| 15-8-51 | ஸ்ரீ எஸ். டி. சுந்தரம்<br>ஸ்ரீ கே. சாரங்கபாணி & பார்ட்டி | — | "மனிதனும் மிருகமும்"<br>நாடகம் |
| 16-8-51 | ஸ்ரீ கே. ஆர். ராமசாமி & பார்ட்டி | — | "வேலைக்காரி"<br>நாடகம் |
| 17-8-51 | ,, ஷை ,, | — | "ஓர் இரவு"<br>நாடகம் |
| 18-8-51 | ,, ஷை ,, | — | "மனோஹரா"<br>நாடகம் |
| 19-8-51 | ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள் | — | "மனிதன்"<br>நாடகம் |
| 20-8-51 | ,, ஷை ,, | — | "ஔவையார்"<br>நாடகம் |
| 21-8-51 | ,, ஷை ,, | — | "இன்ஸ்பெக்டர்"<br>நாடகம் |
| 22-8-51 | வாணி பைன் ஆர்ட்ஸ் அகாடமியார் | — | "சந்தர்ப்பவாதி"<br>நாடகம் |
| 23-8-51 | நிருத்ய சில்பி ஸ்ரீமதி உஷாதேவி | — | நடனம் |

டிக்கெட்டுகள் விவரம்:

**ஆதரவாளர்கள்:** முதல் வகுப்பு ரூ. 100 - இரண்டாவது வகுப்பு ரூ. 50

சீஸன் டிக்கெட்டுகள்: முதல் வகுப்பு ரூ. 30 - இரண்டாவது வகுப்பு ரூ. 20
மூன்றாவது வகுப்பு ரூ. 15 - நான்காவது வகுப்பு ரூ. 10

தினசரிக் கட்டணம்: ரூ. 5, 3, 2, 1 & அணா 8

டிக்கெட்டுகள் காலேஜ் கட்டிடத்தில் கிடைக்கும்.

இசை அரசு எம். எம். தண்டபாணி தேசிகர்,
அக்கிராசனர், சர் தியாகராயா காலேஜ் நிதிக் கமிட்டி.

## “உமா” வாட்ச் செயின்கள்

தங்கத் தகடு கலப்பு உலோகத்தின்மீது சுற்றப்பெற்று தயார் செய்தவை. ஜீவிதகாலம் வரையிலும் திருப்தி கொடுக்கும்.




சாமான்களுக்கு வி. பி. சார்ஜ் ரூ. 1-2-0 மாத்திரம். வேண்டியவர்களுக்கு கேட்லாக் இலவசம்

**உமா கோல்ட் கவரிங் ஒர்க்ஸ், உமா மஹால்-மசூலிப்பட்டணம்**

---



மிகவும் அபூர்வமான

# PEPS






## இருமல், ஜலதோஷம், குளிர் ஜுரம், இன்ப்ளூவென்ஸா ஆகியவற்றைக் கண்டிக்கிறது

பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும்போதே அதன் மருந்து சத்துக்கள் சுவாஸப் பைக்கும் மார்புக்கும் செல்கின்றன. பெப்ஸில் உள்ள அபூர்வ சத்துக்கள் வெகு விரைவில் அபாயகரமான கிருமிகளை அழித்து, தொண்டை கரகரப்பை அகற்றி, நமைச்சலைப் போக்கி, ஓயாத இருமலையும் நிறுத்தி விடுகிறது. சாப்பிட இனிமையானது.

**PEPS** மார்பு, சுவாஸப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத கிருமி நாசக மாத்திரைகள்

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



எந்த பொருளிலும் சிறந்ததையே வழக்கமாக உபயோகிக்கும் மனிதர்கள் ப்ளு ஜில்லெட் பிளேடுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். பணத்தால் இதைவிட சிறந்ததை வாங்கமுடியாது. நீடித்த காலம் உழைப்பதும், மிகவும் கூராக தீட்டப்பட்டதுமான ப்ளு ஜில்லெட் பிளேடுகள் உங்கள் தாடியை சுலபமாக நீக்கிவிடுகின்றன. ஆயினும் அதன் விலை மிகவும் சகாயமாயிருக்கிறது. அதனால் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனவந்தனைப் போலக்ஷவரம்செய்துகொள்ளலாம்.




# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா

# ARMSTRONG
## THE BETTER BICYCLE

# ஆம்ஸ்டிராங்
## சிறந்த ஸைகிள்



சிறந்த ஸைகிளாகிய ஆம்ஸ்டிராங் ஒன்று உங்களிடம் இருந்தால் போதும்; வேலை நிமித்தமாகவோ வேடிக்கையாகவோ எவ்வித தொந்தரவும் இன்றி நீங்கள் ராஜபாட்டை போல சவாரி செய்யலாம்.

ஒரு ஆம்ஸ்டிராங் வாங்குங்கள். ஸைகிள் தொழிலில் பிரசித்தி பெற்ற தயாரிப்பாளர்களின் சிறந்த தயாரிப்பு உங்களுக்குச் சொந்தமாயிருக்கிறது என்கிற பெருமை உங்களுக்கு விரைவில் ஏற்படும். அதன் பெயரே குறிப்பிடுவதுபோல வலிவாகவும், இந்தியாவின் கரடுமுரடான ரஸ்தாக்களில் நீடித்து நின்று வருஷக் கணக்கில் நம்பிக்கை அளிக்கத் தக்கவாறு உழைப்பதாகவும் அது விளங்குகிறது. ஆம்ஸ்டிராங் — மிகவும் பிரபலமான ஸைகிள் — ரஸ்தாவில் அதை நம்புங்கள். அதற்குக் கொடுக்கும் விலை அதற்குத் தகும்.




விநியோகஸ்தர்கள்:

ராயல் ஸைகிள் அண்டு மோட்டார் கம்பெனி
13/14, பிராட்வே, தபால் பெட்டி நெ. 219, சென்னை-1.

**தி பயனீர் ஸைகிள் ஹவுஸ்,**
மேலக் கோபுர வீதி, மதுரை,

# சோப்புகளுக்கு ராஜா

கால் நூற்றாண்டுகளுக்கு மேலாக கோத்ரேஜ் ந. 1 சோப் அரசனாயிருந்து வருகிறது. தலைமுறை தலைமுறையாக உபயோகிக்கும் பலவித ஜனங்களே அதற்கு இப்பெருமையுள்ள பட்டத்தை அளித்திருக்கின்றனர். ஏனெனில் அது கிடைக்கக்கூடிய சிறந்த பொருள்களிலிருந்து வெகு சாமர்த்தியமாகத் தயாரிக்கப்படுகிறது. அதன் புதிய இனிய வாசனை, ஏராளமான நுரை, பெரிய சைஸ் (மார்கெட்டில் மிகப் பெரிய சோப்) அதையே எல்லோரும் விரும்பச் செய்கின்றன.







முற்றிலும் சுத்தமானது - மிருகக் கொழுப்பற்றதென்பதற்கு உத்தரவாதம்.

**கோத்ரேஜ்** சோப்ஸ், லிட்.
ரிஜிஸ்டர்டு

மதராஸ்: 164, பிராட்வே: கோச்சி: 6/36, கல்வத்தி.

**தாவர எண்ணெய்களினால் சோப்பு தயாரிப்பதில் முதன்மையானவர்கள்.**

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 10
இதழ் 52

1951 ஜூலை 29

கர
ஆடி 13உ



## மீனாக்ஷி - பரமேஸ்வரன்

பிரபலம் வாய்ந்த விளம்பர ஆலோசகர்களான மதராஸ் மெஸர்ஸ். பி. எஸ். மணி & கம்பெனியின் புரொப்ரைட்டர் ஸ்ரீ பி. எஸ். அய்யர் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி பி. எஸ். பரமேஸ்வரனுக்கும் மதுரை பிரதம சப்-ஜட்ஜ் ஸ்ரீ வி. ஆர். விஸ்வனாதய்யர் அவர்கள் குமாரி சௌபாக்யவதி மீனாக்ஷிக்கும் சென்ற ஜூலை 15-ம் தேதியன்று மதுரையில் விவாகம் இனிது நடந்தேறியது. விவாகத்திற்கு அநேக பிரபலஸ்தர்களும் விஜயம் செய்து தம்பதிகளை ஆசிர்வதித்தனர். ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் தம்பதிகளுக்கு வழங்கப்பட்டன

**வாழ்க மணமக்கள் !**



கல்கி

மலர் 10 } தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் { இதழ் 52

# கிலி கொண்ட அலிகான்

பாகிஸ்தான் பிரதம மந்திரி கிலி கொண்டிருக்கிறார். மிகவும் பயப்படுகிறார். பாவம்! கைகால்கள் வெதறுகின்றன. பிரதம மந்திரி ஆசனத்தை இறுக்கிப் பிடித்துக் கொள்கிறார்! அப்படியும் பயம் தீரவில்லை! நடுக்கம் நீங்கவில்லை! "ஓடி வாருங்கள்! எல்லோரும் ஓடி வாருங்கள்! அதோ இந்திய சைன்யம் திரண்டு நிற்பதைப் பாருங்கள்! ஐயோ! பயமாயிருக்கிறதே! யாராவது வந்து இரண்டு அதட்டல் போட்டு இங்கு நிற்கும் இந்திய சைன்யத்தைப் போகச் சொல்லுங்கள்!" என்று அலறுகிறார்.

உண்மையில் பாகிஸ்தான் பிரதமர் பயப்படுவதற்குக் காரணம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அந்தக் காரணம் இந்திய எல்லைப்புறத்தில் தற்காப்புக்காக நிற்கும் இந்திய சைன்யம் அல்ல. லியாகத் அலி பயப்படுவது துவேஷம் என்னும் பூதத்தைக் கண்டுதான்! அது அவரே தூபம் போட்டு எழுப்பிவிட்ட பூதம். அதற்கு அடிக்கடி ஏதாவது ஆகாரம் கொடுத்து வர வேண்டும்; வேலையும் கொடுத்து வரவேண்டும். அப்படிக் கொடுக்காவிட்டால் தன்னை எழுப்பி விட்டவனையே அது விழுங்கி ஏப்பம் விடும். இப்போது அந்தப் பூதத்துக்கு அகோரமான பசி! வாசலில் நின்று கொண்டு, "கொண்டு வா அந்த லியாகத் அலிகானை! விழுங்கிப் பசி தீர்த்துக் கொள்கிறேன்!" என்று கூவுகிறது. அதைக் கேட்டு விட்டுத்தான் லியாகத் அலிகான் பயப்படுகிறார். ஆனால் அந்தக் காரணத்தைச் சொல்ல இஷ்டப்படாமல் "அதோ எல்லைப்புறத்தில் இந்திய சைன்யம் வந்து நிற்கிறதே!" என்று முறையிடுகிறார்.

இந்தியாவின் எல்லைப்புறத்தில் இந்திய சைன்யம் வந்து நிற்காமல் வேறு என்ன செய்யும்? மலைக் குகைகளிலே போய் ஒளிந்து கொள்ளுமா?

அதுவும் பாகிஸ்தான் தலைவர்களும் பத்திரிகைகளும் சென்ற ஒரு வருஷமாக இடைவிடாத 'ஜிஹாத்' பிரசாரம் செய்து கொண்டு வரும்போது இந்திய சைன்யத்துக்கு வேறு எங்கே, என்ன வேலை இருக்க முடியும்? எல்லைப் புறத்திலே வந்து நின்றுதானே ஆகவேண்டும்?

துவேஷப் பிரசாரத்தினால் வெறி கொண்ட பாகிஸ்தானியர் புதுடில்லி வாசலுக்கு வரும் வரையில் இந்திய சைன்யம் விந்திய மலைக்குத் தெற்கே தூங்கிக் கொண்டிருக்க வேண்டுமா?—நல்ல யோசனை, ஐயா!

* * * *

பாகிஸ்தானின் உள் நிலைமையை எவ்வளவுதான் மூடி வைக்கப் பார்த்தாலும் சில விஷயங்கள் வெளிப்பட்டுத்தான் இருக்கின்றன.

பாகிஸ்தானின் முக்கிய மத்தியப் பிரதேசமாகிய பஞ்சாப் முஸ்லிம்கள் பாகிஸ்தானில் தங்களுக்கு ஆதிக்கம் இல்லையென்பது பற்றிக் குமுறிக் கொண்டிருக்கின்றனர். வெளியிலிருந்து வந்த லியாகத் அலிகான் முதலியோர் சர்வாதிகாரம் வகிப்பது பற்றி ஆத்திரப்படுகின்றனர். பாகிஸ்தான் தலைநகரம் கராச்சிக்குப் போய் விட்டதும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை.

ஸிந்து மாகாணத்தவரோ கராச்சியைத் தங்கள் வசத்திலிருந்து பிடுங்கிக்கொண்டது பற்றி ஆத்திரப்படுகின்றனர். கராச்சி பாகிஸ்தான் தலைநகரம் ஆகிவிட்டபடியால் ஸிந்து மாகாண சர்க்கார் வேறிடத்துக்குப் போக வேண்டியதாயிற்றல்லவா?

கிழக்கு வங்காள முஸ்லிம்கள் தங்களுடைய வீட்டு பாஷையும் நாட்டு பாஷையுமான வங்காளியைப் புறக்கணித்து உருது பாஷையைத் திணிப்பது பற்றி ஆத்திரப்பட்டுக் கொண்டிருக்கின்றனர்.

வடமேற்கு எல்லைப் புறத்தில் ஆவேசங் கொண்ட பட்டாணியர் ''எங்களுக்கும் சுதந்திரம் வேண்டும்'' என்று கோஷிக்கிறார்கள். அந்தக் கோஷத்தை ஆப்கானிய மக்களும் ஆப்கானிய சர்க்காரும் ஆதரிக்கின்றனர்.

இந்த மாதிரி பலவித அதிருப்திகளின் விளைவாக பாகிஸ்தான் இராணுவத்திலேயே புரட்சி புகையத் தொடங்கியது. இராணுவ காரியாலயத் தலைவர் உள்படப் பல பெரிய இராணுவ உத்தியோகஸ்தர்கள் சில மாதங்களுக்கு முன்பு கைது செய்யப்பட்டனர். விசாரணை மூடு மந்திரமாக நடந்து வருகிறது.

''காஷ்மீர் நிச்சயமாகப் பாகிஸ்தான் உடைமையாகும்'' என்று பாகிஸ்தான் தலைவர்கள் சொல்லி வந்தார்கள். ''ஏன் இன்னும் ஆகவில்லை!'' என்று பாகிஸ்தான் பாமர மக்கள் கேட்கத் தொடங்கி விட்டனர்.

இத்தகைய அதிருப்திகளையும் புகைச்சல்களையும் சமாளிப்பதற்காக லியாகத் அலிகான் அடிக்கடி 'துவேஷம்' என்னும் பூதத்தை ஏவ வேண்டி யிருக்கிறது.

இந்தியாவின் மீது பொய்ப் புகார்கள், இந்தியத் தலைவர்கள் மீது அபாண்டமான பழிகள், ஹிந்துக்கள்மீது பொய்க் குற்றங்கள்—இப்படி ஓயாமல் சொல்லித் துவேஷப் பிரசாரத்தை நடத்தி வர வேண்டி யிருக்கிறது.

அவ்விதம் துவேஷத்தை உண்டு பண்ணினால், ''பாகிஸ்தானுக்கு ஆபத்து வந்துவிட்டது! ஆகையால் எல்லாரும் என்னைத் தாங்கி நில்லுங்கள்! நான் சொல்லுகிறபடி கேளுங்கள்!'' என்று பாகிஸ்தான் பாமர ஜனங்களிடையே ஏமாற்றுப் பிரசாரம் செய்து தம் பதவிக்குப் பலம் தேடலாம் அல்லவா!

இத்தகைய பிரசார முறையை ஹிட்லர் முன்னம் கையாண்டார். துவேஷம் என்னும் பூதத்தை அவர் தமக்கு உதவி செய்ய அமர்த்திக் கொண்டார்.

பிரசார முறையில் மேலும் மேலும் பொய்யைக் கூட்ட வேண்டியதா யிருந்தது. ஆகையால் முடிவில் அது பலிக்காமற் போயிற்று.

துவேஷப் பேய்க்கு ஓயாமல் இரை போட வேண்டியதா யிருந்தது. ஜெக்கோஸ்லோவகியா, ஆஸ்திரியா, ஹங்கரி, பெல்ஜியம், பிரான்ஸ், ருமேனியா, போலந்து என்று அதற்கு இரை கொடுத்து வந்தும் போதவில்லை. ''ருஷியாவைப் பிடித்துக் கொடு!'' என்று அந்தப் பூதம் கேட்டது. அது முடியாமற் போகவே ஹிட்லரையே 'அபக்' என்று விழுங்கி ஏப்பம் விட்டது.

அதே துவேஷ பூதத்தைத்தான் இப்போது லியாகத் அலிகான் தமக்கு உதவியாக அமர்த்திக் கொண்டிருக்கிறார்.

ஆனால் அதற்கு இரை கொடுக்கப் பக்கத்தில் ஒன்றுமே யில்லை.

காஷ்மீரைக் கொடுக்கப் பார்த்தார்; அது முடியவில்லை. ஆகையால் பூதம் ''கொண்டுவா அந்த லியாகத் அலிகானை!'' என்று வாசலில் நின்று கூவுகிறது!

லியாகத் அலிகானுக்குப் பயமாயிருக்கிறது!

ஆகவே, எல்லாரையும் உதவிக்குக் கூவி அழைக்கிறார். அத்துடன் பாகிஸ்தானையும் யுத்த சன்னத்தமாக்கத் தொடங்கி யிருக்கிறார். லாகூரில் இருட்டடிப்பு ஒத்திகைகள் தீவிரமாக நடந்து வருகின்றன!

* * *

ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையில் நம நேருஜியையும் ராஜாஜியையும் விட ஆர்வங் கொண்டவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது.

காந்தி மகானின் பிரதம சீடர்களான இப்பெரியோர்கள் பாகிஸ்தான்மீது பலாத்காரப் போர் தொடுக்க விரும்புவதாகச் சொல்வதைப் போல் மடமையும் பெரும் பொய்யும் வேறில்லை.

இவ்வளவு பெரிய பொய்யை உலகம் ஒரு நாளும் நம்பாது.






உலகத்தில் யாராவது நம்புவதாக நடித்தால், அவர்களுக்கு வேறு தூர் நோக்கம் இருக்க வேண்டும். "பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் போர் மூண்டால் நமக்கு நல்லது" என்ற கெட்ட எண்ணம் இருக்க வேண்டும். பழைய பிரித்தாளும் கொள்கையை வேறு விதத்தில் இப்போது கையாளலாம் என்ற ஆசை அவர்களுக்கு இருக்க வேண்டும்.

பாகிஸ்தான் பொது மக்கள் நிலைமை கட்டுக்கடங்காமல் மீறிப் போவதற்குள் விழித்துக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

லியாகத் அலிகான் தாம் எழுப்பிவிட்ட துவேஷப் பிசாசைப் பிடித்துப் பானைக்குள் அடைத்துக் குழி தோண்டிப் புதைக்க முயல்வார் என்று நம்புகிறோம்.

எது எப்படியானாலும், இந்த நெருக்கடியில் ஜவாஹர்லால் நேருவை இந்திய மக்கள் அனைவரும் ஒரு முகமாகப் பின்பற்றி நிற்பார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

தங்களுக்குள் எந்தவிதமான வேற்றுமை இருந்தாலும் மறந்து விட்டு, நேருஜியை ஆதரித்து நிற்பார்கள் என்பது நிச்சயம்.

காங்கிரஸ் வாதிகள், பிரஜா கட்சியார், சோஷலிஸ்டுகள், கம்யூனிஸ்டுகள் முதலிய அனைவருமே ஆதரிப்பார்கள்.

ஹிந்துக்கள், இந்திய முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள் முதலிய எல்லாச் சமூகத்தாரும் ஆதரித்து நிற்பார்கள்.

இது நமது நம்பிக்கை; இது நம் பிரார்த்தனை; இது நேரு சர்க்காருக்கு நம் உறுதிமொழி.

# கித்வாய் திருவிளையாடல்

அரே பாப்ரே! இந்தக் கித்வாய் என்னமோ சாமான்யப் பட்ட மனிதர் என்றல்லவா எண்ணியிருந்தோம்! பலே 'கில்லாடி'யாயிருக்கிறாரே!—'கில்லாடி' என்றால் ஏதோ வசவு என்று நினைக்க வேண்டாம். ஹிந்தியில் 'கிலாடி' என்றால் 'விளையாட்டுக்காரன்' என்று பொருள். அதுதான் தமிழில் 'கில்லாடி' ஆகியிருக்கிறது. கித்வாயைப் 'பலே விளையாட்டுக்காரர்' என்றுதான் சொல்கிறோம். அவ்வளவு பிரமாதமான திருவிளையாடல்களைப் புரிந்து வருகிறார்.

கித்வாயைப் பற்றி ஏற்கனவே பராபரியாகக் கேள்விப்பட்டதுண்டு. பழைய ஐக்கிய மாகாணமாகிய புதிய உத்தரப் பிரதேசத்தில் அவர் பெரிய பெரிய காரியங்களைச் சாதித்தவர் என்று சொல்வதுண்டு. 'உப்பில்லாமல் கலக் கஞ்சி குடித்தவர்' என்று கூடச் சொன்னார்கள். இப்போது பார்த்தால் என்ன தெரிகிறது! உப்பில்லாமல் அவர் கலக் கஞ்சியும் குடிப்பார்; பிறகு கஞ்சியில்லாமல் கல உப்பையும் தின்பார்; இவ்வளவையும் செய்து விட்டு, "நான் ஒன்றுமே செய்யவில்லை" என்றும் சொல்வார் என்று தெரிய வந்திருக்கிறது! பலே! பலே!

காங்கிரஸை விட்டுச் சில பிரமுகர்கள் போய் விடப் போகிறார்கள் என்ற பேச்சு எழுந்த போது, கிருபளானி - கித்வாய் இருவருடைய பெயர்களும் சேர்ந்தே அடிபட்டு வந்தன! அடிபட்டு வந்தனவே தவிர, வெகுகாலம் காயம் ஒன்றும் படாமலே இருந்தது. கடைசியாக, கிருபளானி மனந் துணிந்து ஆற்றிலிருந்து கரையேறிச் சேற்றில் 'தடார்' என்று குதித்து விட்டார்!

ஆனால் கித்வாய் சாகிப் அப்படியெல்லாம் அவசரப்பட்டு விடவில்லை. "இதோ ஆற்றிலிருந்து சேற்றில் குதிக்கப் போகிறேன்"






என்றார். "இல்லை, இல்லை! சேற்றிலிருந்து இதோ ஆற்றில் குதித்து விட்டேன்!" என்றார். "கிடையவே கிடையாது! ஆற்றை விட்டு, நான் இன்னும் கரையேறவே இல்லையே!" என்றார். "போங்கள் ஐயா! சேற்றில் குதிப்ப தென்றால் இலேசா! யோசித்துத்தான் செய்வேன்!" என்றார். "இதோ ஆற்றில் ஒரு கால்!" என்றார். "இதோ சேற்றில் ஒரு கால்!" என்றார். இப்படிச் சொல்லியே காலத்தைப் போக்கிக் கொண்டிருந்தார்.

கடைசியாக, பெங்களூர் அ. இ. கா. கமிட்டி கூட்டத்துக்குப் பிறகு ஒரு வழியாகச் சேற்றில் குதித்துவிட்டார் என்று தோன்றியது. மறுபடியும் மாயாஜால கித்வாய் நம்மை ஏமாற்றி விட்டார்.

மீண்டும் "இதோ ஒரு பிரமாதமான தாண்டிக் குதிப்பு!" என்றார். அவர் குதித்த குதியில் ராஷ்டிரபதி புருஷோத்தம தாஸ் தாண்டன் முகத்தில் ஒரு சட்டிச் சேற்றை அப்பினார். பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவின் தலையில் ஒரு குடம் தண்ணீரைக் கொட்டினார்.!

ரொம்பப் பெரிய மனிதர்கள் சில சமயம் விளையாட்டு மனிதர்களின் கூட்டுறவினால் வீண் அபகீர்த்திக்கு ஆளாவது உண்டு. நமது ஜவாஹர்லால்ஜீ—கித்வாய் சாஹிபின் கூட்டுறவை இதற்கு நல்லதோர் உதாரணமாகச் சொல்லலாம்.

கித்வாய் தபால் இலாகா மந்திரியாக வந்த பிறகு மள மள வென்று செய்த சீர்திருத்தங்கள் காங்கிரஸ் ஆட்சியின் மீது மக்களின் அதிருப்தி பெருகவே காரணமாயிருந்தன. அடாடா! அரை அணாவிலிருந்து முக்காலணா, முக்காலணாவிலிருந்து ஒன்றரை அணா, ஒன்றரை அணாவிலிருந்து இரண்டணா என்று எவ்வளவு அவசரமாகத் தபால் கார்டு—கவர்களின் விலைகள் உயர்ந்தன! அப்புறம், ஞாயிற்றுக்கிழமை தபால் விடுமுறை விட்டாரே அதைத்தான் என்னவென்று புகழ்வது! ஒருநாள் விடுமுறையினால் மூன்று நாள் தபால்கள் அல்லவா சாவகாசமாகத் தூங்கி வழிய வசதி ஏற்பட்டது!

அப்படிப்பட்ட கித்வாய் பெங்களூர் கூட்டத்தின் முடிவாக ஒரு வழியாய் இந்திய சர்க்காரிலிருந்து விடைபெற்றுக் கொண்டார் என்று பலரும் சந்தோஷப்பட்டது அற்ப சந்தோஷமாய் முடிந்தது!

ஜவாஹர்லால்ஜீ வேண்டிக் கொண்டார் என்று மனிதர் மந்திரி பதவிக்குத் திரும்பி வந்து விட்டார்!

'ராஜினாமா வாபஸ்' கடிதம் சட்டைப் பையில் தயாராக இருந்தது போலும்!

திரும்பி வந்ததுதான் வந்தாரே! பாவம்! அந்தக் கிழவர் தாண்டனை அப்படித் திட்டிக் கொண்டா வர வேண்டும்!

"காங்கிரஸ் எந்தெந்த இலட்சியங்களுக்காக நிற்கிறதோ அவ்வளவுக்கும் விரோதி டாண்டன்!" என்று சொல்ல வேண்டும்! அப்படியானால், அத்தகைய டாண்டன் தலைமை வகிக்கும் ஸ்தாபனத்தில் இன்னும் இவர் போற்றும் ஜவாஹர்லால் எப்படி இருக்கிறார்! ஜவாஹர்லாலும் காங்கிரஸ் லட்சியங்களைப் பறிகொடுத்தவரா! அப்படியானால், ஜவாஹர்லாலைக் கித்வாய் எதற்காகப் போற்றுகிறாராம்!

மொத்தத்தில் கித்வாயின் திருவிளையாடல் பண்டித ஜவாஹர்லாலுக்குச் சகாயம் ஒன்றும் செய்யவில்லை யென்பது சர்வ நிச்சயம். பெரிய தலை வேதனையைத்தான் உண்டுபண்ணி யிருக்கிறது. இந்த இக்கட்டிலிருந்து ஜவாஹர்லால்ஜீ எப்படி விடுதலை அடையப் போகிறார் என்று இந்த இதழ் நேயர்களின் கைக்குள் வருவதற்குள்ளேயே தெரிந்து போய் விடலாம்.






# ஜான் புல் குதிக்கிறார்!

"இந்த ஈரான் எவ்வளவு சிறிய நாடு! இது நம்மை மிரட்டுவது, நாம் இதற்குப் பணிந்து விடுவதா! வெட்கம்! வெட்கம்! எல்லாம் இந்தத் தொழிற்கட்சி ஆட்சி சர்க்காரால் 'வந்த ஆபத்துதான்" என்று வின்ஸ்டன் சர்ச்சிலும் குதிக்கிறார்.

ஏன் குதிக்க மாட்டார்கள்! குதிக்கத்தான் செய்வார்கள்!

'கறுப்புத் தங்கம்' என்று வழங்கப்படும் எண்ணெய்ச் செல்வத்தில் பிரிட்டிஷாருக்கு இருந்து வந்த ஏகபோக உரிமைக்கு ஆபத்து நேர்ந்திருப்பதைக் கண்டு அவர்கள் திக்பிரமை கொண்டு குதிப்பதில் ஆச்சரியம் என்ன!

பல மாதங்களாகப் புகைந்து கொண்டிருக்கும் ஈரான் எண்ணெய் விவகாரம், சில தினங்களுக்கு முன் குபீரென்று பற்றிக் கொண்டு விடுமோ என்று தோன்றியது. பாரசீக வளைகுடாவுக்குப் பிரிட்டிஷ் போர்க் கப்பல்கள் வந்தன. காஸ்பியன் கடலில் ருஷ்ய யுத்தக் கப்பல்கள் காட்சியளித்தன. ஈரானின் வடக்கு எல்லையில் ருஷ்யத் துருப்புகளும் வந்து குவிந்தன. சம்பந்தப்பட்ட நாடுகள் மோதிக் கொள்வதற்கு இதைக் காட்டிலும் வேறு வினை என்ன வேண்டும்!

நல்ல வேளையாக அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் தம்முடைய வெளிநாட்டு விவகார ஆலோசகரான ஸ்ரீ ஏ. ஹாரிமனை உற்ற சமயத்தில் ஈரானுக்குத் தூது அனுப்பி வைத்தார். அவர் ஈரானுக்கு வந்ததும் வராததுமாக அவருக்கு விசித்திரமான வரவேற்பு அளிக்கப்பட்டது. அதாவது ஹாரிமன் விஜயம் காரணமாக ஈரான் தலைநகரில் பெரும் கலகங்கள் பீறிட்டு எழுந்தன. ஹாரிமன் தூது தோல்வியுற்றது என்று கூடப் பத்திரிகைச் செய்திகள் வெளியாயின.

ஆனால் இதை எழுதும்போது கிடைத்துள்ள செய்திகளிலிருந்து ஹாரிமன் தூதினால் ஓரளவு பயன் விளையலாம் என்று தோன்றுகிறது. மேற்படி விவகாரத்தில் சம்பந்தப்பட்ட பாரசீக சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காரும் தங்கள் தங்கள் பிடிவாதத்தைத் தளர்த்திக் கொள்ள இசைந்திருக்கின்றனர். மறுபடியும் வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக் கொள்ளாமல் இருந்தால், ஈரான் எண்ணெய்த் தகராறு சமரசமாக முடிவடையக் கூடும்.

பிரிட்டிஷாரை மிகவும் நெருக்கடியான சமயங்களில் யார் கை விட்டாலும் அவர்களுடைய ராஜதந்திரம் மாத்திரம் அவர்களைக் கைவிடுவதில்லை. நாலு ஆண்டுகளுக்கு முன் இருநூறு ஆண்டு அனுபோக பாத்தியத்தை அவர்கள் உதறித் தள்ளிவிட்டு இந்தியாவிலிருந்து வெளியேறியது எவ்வளவு மகத்தான ராஜதந்திரம்! ஒரு வருஷத்துக்கு முன் அவர்கள் அமெரிக்காவைக் கூட விரோதித்துக் கொண்டு சீன சர்க்காரை அங்கீகரித்தது பெரிய ராஜதந்திரம் அல்லவா! அந்தப் பிரச்னைகளுடன் ஒப்பிடும்போது இந்த எண்ணெய் விவகாரம் அற்பமானதுதானே!

ஈரான் பூமியில் எண்ணெய் எடுக்கும் முழு உரிமையும் ஈரானுக்கு உண்டு என்ற நியாயத்தைப் பிரிட்டன் யாதொரு நிபந்தனையுமின்றி ஒப்புக் கொண்டு விடும் பட்சத்தில், மற்ற சில்லறைப் பிரச்னைகள் எல்லாம் நொடிப் பொழுதில் தீர்ந்து விடும்.

மாபெரும் பிரச்னைகளைச் சமாளிக்கும் விஷயத்தில் பிரிட்டிஷாருக்கு உற்ற துணையாக இருந்துள்ள ராஜதந்திரம், இந்தச் சாதாரண எண்ணெய் விவகாரத்தில் அவர்களைக் கை விட்டு விடாது என்று எதிர்பார்க்கலாம்.



# அக்கப்போர்

"ராஜபுதன பாலைவனத்தை வளரவிட்டால் இன்னும் சில வருஷங்களில் இது அதிகரித்து, வட இந்தியாவையும் தென்னிந்தியாவையும் பிரித்து விடும்" என்று சர்க்கார் காட்டிலாகா நிபுணர்கள் கருதுகின்றனர். —ஒரு செய்தி

'ராஜபுதன பாலைவனம் அடியோடு வாழ்க' என்று கோஷிக்கிறார் ஒரு வடநாட்டுச் சரண்டல் எதிர்ப்பாளர்.

★

"உணவு தான்யங்களின் விலை உயர்வு பற்றி கனம் முன்ஷியின் விளக்கம்."

—ஒரு செய்தித் தலைப்பு

கனம் முன்ஷி வைத்த மரங்கள் உயர்ந்தாலும் உயராவிட்டாலும் பண்டங்களின் விலை மாத்திரம் உயர்ந்து கொண்டே போகிறது.

★

"போலீஸார், மற்றும் இதர சர்க்கார் அதிகாரிகளின் நடத்தையைப் பற்றி இரண்டு மாதத்துக்கு யாதொரு கட்டுரையும் பிரசுரிக்கலாகாது என்று ஸ்தல வாரப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியருக்கு இவ்வூர் ஸப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்."

—விஜயவாடா செய்தி

மேற்படி சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தங்கள் நடத்தையை மாற்றிக் கொள்ள இரண்டு மாத காலம் போதுமா!

★

"தென் ஜப்பானில் வெள்ளப் பாழ். 03 பேர் காணாமல் போய் விட்டனர்."

—செய்தித் தலைப்புகள்

எத்தனை பேர் காணாமல் போய்விட்டார்கள் என்பது தெரிய வேண்டுமானால் அச்சில் காணாமல் போன எண் என்ன என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும்.

★

"பம்பாய் மெயிலுக்கு எதிரில் எருமை மாடு ஒன்று வந்து முட்டிக் கொண்டதால் வண்டி தாமதப்பட்டது."

—ஒரு செய்தி

எருமை மாட்டின் மீது எம தர்மராஜன் வராத வரையில் க்ஷேமந்தான்!

# உலகம் உங்களுக்கு!

தங்களுடைய ஜூலை 1-ந்தேதி கல்கி இதழில் 'உலகம் உங்களுக்கு' என்ற கட்டுரையைப் படித்த பின் எனக்கு அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை.

நான் இரண்டு ஆண்டுகளுக்கு முன் எஸ். எஸ். எல். ஸி. தேறி கல்லூரியை மூற்றுகை யிட்டுக் கொண்டபோது, படுக்கையில் படுக்கும்படியான நிலைமை ஏற்பட்டது.

திரும்பவும் இந்த வருடம் கல்லூரியில் சேருவோமென்று நினைத்தால், அதிலும் ஒரு இடையூறு குறுக்கிட்டுவிட்டது. உலகத்தையே ஆட்டி வைக்கும் பணப்பிரச்னைதான்!

இந்த நிலையில் வீட்டில் சும்மா இருப்பதற்குப் பதிலாக ஏதாவது பத்திரிகைக்குக் கதைகளாவது அனுப்பிக் கொண்டிருக்கலாமென்று முயற்சி செய்தேன். ஒவ்வொரு கதைக்கும் 'புக்-போஸ்டு'க்கு முக்காலணா, திருப்பியனுப்ப முக்காலணா ஆக ஒன்றரையணா ஸ்டாம்பாக இரண்டு ரூபாய் செலவழித்ததுதான் மிச்சம்! வேறொன்றும் வெற்றி கிடைக்கவில்லை.

இந்த விஷயத்தில் நான் 'வில்லுக்கொரு விஜயன்' பார்த்தனை விடக் கை தேர்ந்தவன் என்ற ஒரு நினைவுதான் எனக்குப் பெருமை தருகிறது. எப்படியென்றால் அர்ஜுனன் எய்யும் அம்புகள் குறி தவறாமல் சென்று எதிரியைத் தாக்குமே தவிர, திரும்பி அவனிடமே வருவதில்லை. ஆனால் நான் தொடுத்த (கதை அடங்கிய புக் போஸ்டு) அம்புகளோவெனில், பத்திரிகாலயத்தையும், ஆசிரியரையும் தாக்கி விட்டு, தவறாமல் குறித்த நேரத்தில் என்னிடமே திரும்பி வருவது எனக்குப் பெருமை தரத்தக்க விஷயமல்லவா!

இந்த நிலைமையில் 'உலகம் உங்களுக்கு' என்று நம்புவது மிகவும் அசாத்தியமான காரியம். முன்னேற்றப் படிகளிலே நாம் சாண் ஏறினால், முழம் சறுக்குகிறதென்பதை என்னைப் போன்ற வாலிபர்கள் தான் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

'உலகம் உங்களுக்கு' என்ற மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே வேலை தேடி...... ஸ்டுடியோவின் வாசலில் காலை வைத்தால் தடியைச் சுழற்றிக் கொண்டு வருகிறான் 'தார்வான்.' உலகமே நம்முடையதுதான் என்றாலும் நமது தேவைக்கு வேண்டிய பணத்தை அது தருவதில்லை.

உலகம் எல்லோருடையதுமில்லை; செல்வாக்கும் செல்வமும் சூழ்ந்த ஒரு சிறு கூட்டத்திற்கே!

ஆவடி
9—7—51

கே. எஸ். மணி

[உலகம் என்பது பத்திரிகைக் காரியாலயமும் ஸினிமா ஸ்டுடியோவுந்தான் என்று தாங்கள் எண்ணியிருப்பதாகத் தெரிகிறது. இவற்றுக்கு வெளியே மிக விசாலமான உலகம் இருக்கிறது. சென்னை நகரில் டாக்ஸி வண்டி ஓட்டும் டிரைவர்கள் மாதம் ரூபாய் இருநூறு சம்பாதிக்கிறார்கள் என்பது தங்களுக்குத் தெரியுமா? ஏதேனும் ஒரு கைத் தொழிலிலோ வர்த்தகத் துறையிலோ அமர்ந்து இரண்டு வருஷம் வேலை பாருங்கள். பிறகு வாழ்க்கையோடு ஒட்டிய அருமையான கதைகள் எழுதுவதற்கு வரும். எந்தப் பத்திரிகாசிரியரும் திருப்பி அனுப்ப இயலாத கதைகளை எழுதும் ஆற்றல் பெறுவீர்கள்.

—ஆசிரியர்]

## அட்டைப்பட விளக்கம்

அடுத்த அத்தியாயத்தில் குந்தவையும் வானதியும் பாதாளச் சிறைக்குப் போகிறார்கள். அங்கே அவர்கள் சேந்தன் அமுதனைச் சந்திக்கும் காட்சியை நமது இந்த இதழ் அட்டைப்படம் சித்திரிக்கிறது.

## பதினோராவது அகில இந்திய காதி, சுதேசி கைத்தொழில் பொருட்காட்சி, சேலம்

(சேலம் நகர சபையால் நடத்தப்படுவது)

## நகர சபை ஆரம்பக் கல்வி நிதிக்காக



**ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி**

உதவும் சங்கீதக் கச்சேரி

26-8-51 ஞாயிற்றுக்கிழமை

மாலை 6-30 மணிக்கு

**சேலம் போஸ் மைதானத்தில்**

சென்னை மராமத்திலாகா மந்திரி

கனம் ஸ்ரீ எம். பக்தவத்சலம் அவர்கள் தலைமை வகிப்பார்கள்.

டிக்கெட்டு விவரம்: ரூ. 100/- 50/- 25/- 10/- 5/- & 2/-

பொருட்காட்சிக் கமிட்டியார்

# பொன்னியின் செல்வன்

## கல்கி

### பூர்வ கதை

சோழர் பழங்குடியில் பிறந்த நாரீமணிகளில் மிகவும் புகழ் பெற்ற இளவரசி குந்தவை பெரிதும் மனக் கலக்கம் அடைந்திருந்தாள். அவளுடைய இளைய சகோதரன் அருள்மொழி வர்மன் இலங்கையிலும் மூத்த சகோதரன் ஆதித்த கரிகாலன் காஞ்சியிலும் இருந்தார்கள். அவளுடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி தஞ்சையில் நோய்ப்பட்டிருந்தார். இந்நிலைமையில் இந்த இராஜ குடும்பத்துக்கு விரோதமாக நடந்த ஒரு பெரிய சதியைப் பற்றிக் குந்தவை தெரிந்து கொண்டாள். சுந்தர சோழர் காலமானால் உடனே அவருடைய சிறிய தகப்பனாரின் மகன் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்று பழுவேட்டரையர்கள் முதலான சிற்றரசர்களும் பெருந்தர அதிகாரிகளும் இரகசியமாக முடிவு கட்டியிருந்தார்கள். இதை அறிந்து வந்து சொன்ன வந்தியத் தேவனை இலங்கை சென்று அருள்மொழி வர்மனைக் கூட்டி வருவதற்காகக் குந்தவை அனுப்பினாள்.

பின்னர் அவள் தஞ்சை சென்றாள். அங்கே தன் தந்தை உடல் நோய்ப்பட்டிருந்த தல்லாமல் பெரியதொரு மன நோயினாலும் பிடிக்கப்பட்டிருப்பதை அறிந்தாள். தந்தையின் இளம் பிராயத்தில் ஒரு வலைஞர் குல ஊமைப் பெண்ணை அவர் காதலித்ததாகவும், அப் பெண் கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து கடலில் விழுந்து இறந்ததாகவும், அவளுடைய ஆவி வடிவம் இப்போது நள்ளிரவில் வந்து அவரைத் துன்புறுத்தி வந்ததாகவும் தெரிந்து கொண்டாள். இதன் காரணமாக மனம் நலிந்திருந்த சுந்தர சோழர் தமக்குப் பிறகு இராஜ்யத்தை மதுராந்தகனுக்கே கொடுத்து விட விரும்பினார். மதுராந்தகன் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை ஆளத் தகுதியற்றவன் என்று குந்தவை கருதினாள். சோழ சாம்ராஜ்யத்தை அந்தக் கதிக்கு உள்ளாகாமல் காப்பாற்றும் பொறுப்பு இப்போது தன் தலையில் சார்ந்திருப்பதாகவும் எண்ணினாள்.

சோழ சாம்ராஜ்யத்தின் தனாதிகாரியான பெரிய பழுவேட்டரையர் தம் முதிய பிராயத்தில் நந்தினி என்னும் பெண்ணை மணந்திருந்தார். நந்தினியின் வாழ்க்கையில் மர்மங்கள் நிறைந்திருந்தன இப்போதும் அவள் மந்திரவாதிகளுடன் தொடர்பு கொண்டிருந்தாள். சுந்தரசோழரின் மன நோய்க்கு நந்தினி ஏதோ ஒரு வகையில் காரணமாயிருக்கலாம் என்று குந்தவை சந்தேகித்தாள். அதைப் பற்றித் தெரிந்து கொள்ளும் நோக்கத்துடன் நந்தினியின் அரண்மனைக்குச் சென்றாள். அங்கே சம்புவரையரின் மகன் கந்தமாறன் என்பவன் இருந்தான். முதுகில் குத்தப்பட்டுக் குற்றுயிராய்க்

கிடந்தவன், பழுவூர் அரண்மனையில் நந்தினியின் மேற்பார்வையில் நடந்த சிகிச்சையினால் குணமடைந்து வந்தான். கந்தமாறன் தன்னுடைய நண்பனாகிய வந்தியத்தேவன்தான் தன்னை முதுகில் குத்தியிருக்க வேண்டுமென்று ஊகித்தான். அந்த ஊகத்தையே ஊர்ஜிதமாக்கிக் கொண்டு, நடந்ததுடன் நடவாததையும் சேர்த்து ஒரு கற்பனைக் கதையைக் குந்தவையிடம் அவன் சொன்னான். அச்சமயம் ஒரு தாதி ஓடி வந்து, "ஒற்றன் பிடிபட்டான்! வீதியில் கொண்டு வருகிறார்கள்!" என்று கூறினான்.

## இருபதாம் அத்தியாயம்

# இரு பெண் புலிகள்

ஒற்றனைப் பிடித்துக் கட்டி வீதியில் கொண்டு வருகிறார்கள் என்ற செய்தியைத் தாதி ஓடி வந்து தெரிவித்ததும், அங்கிருந்த மூவரின் உள்ளங்களும் பரபரப்பை அடைந்தன. குந்தவையின் உள்ளம் அதிகமாகத் தத்தளித்தது.

"தேவி! நாம் போய் அந்தக் கெட்டிக்கார ஒற்றன் முகம் எப்படியிருக்கிறது என்று பார்க்கலாமா?" என்றான் நந்தினி.

குந்தவை தயக்கத்துடன் "நமக்கென்ன அவனைப்பற்றி?" என்றான்.

"அப்படியானால் சரி!" என்று நந்தினி அசட்டையாய்க் கூறினான்.

"நான் போய்ப் பார்த்து வருகிறேன்" என்று கந்தமாறன் தட்டுத் தடுமாறி எழுந்தான்.

"வேண்டாம்; உம்மால் நடக்க முடியாது; விழுந்து விடுவீர்!" என்றான் நந்தினி.

குந்தவை மனதை மாற்றிக் கொண்டவள் போல், "இவருடைய அருமையான சிநேகிதன் எப்படியிருக்கிறான் என்று நாமும் பார்த்துத்தான் வைக்கலாமே! இந்த அரண்மனை மேன் மாடத்திலிருந்து பார்த்தால் தெரியுமல்லவா?" என்று கேட்டாள்.

"நன்றாய்த் தெரியும்; என்னுடன் வாருங்கள்!" என்று நந்தினி எழுந்து நடந்தாள்.

கந்தமாறன் "தேவி! அவன் என் சிநேகிதனாயிருந்தால், மாமாவிடம் சொல்லி, நான் அவனைச் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்ய வேண்டும்!" என்று சொன்னான்.

"அவன் உமது சிநேகிதன்தானா என்று எங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றான் நந்தினி.

"அப்படியானால், நானும் வந்தே தீருவேன்!" என்று கந்தமாறன் தட்டுத் தடுமாறி நடந்தான்.

மூவரும் அரண்மனை மேன் மாடத்தின் முன்முகப்புக்குச் சென்றார்கள். சற்றுத் தூரத்தில் ஏழெட்டுக் குதிரைகள் வந்து கொண்டிருந்தன. அவற்றின் மீது வேல் பிடித்த வீரர்கள் வந்து கொண்டிருந்தார்கள். குதிரைகளுக்கு மத்தியில் ஒரு மனிதன் நடந்து வந்தான். அவன் கைகளை முதுகுடன் சேர்த்துக் கயிற்றினால் கட்டியிருந்தது. அந்தக் கயிற்றின் இரு முனைகளை இரு பக்கத்திலும் வந்த குதிரை வீரர்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

வீரர்களுக்குச் சற்றுத் தூரத்தில் வேடிக்கை பார்க்கும் கும்பல் வந்து கொண்டிருந்தது.

அரண்மனை மாடத்திலிருந்து பார்த்தவர்களுக்குக் குதிரைகளுக்கு நடுவில் நடந்துவந்த மனிதனின் முகம் முதலில் தெரியவில்லை.

ஊர்வலம் அருகில் வரும் வரையில் அந்த அரண்மனை மேன் மாடத்தில் மௌனம் குடிகொண்டிருந்தது.

குந்தவையின் ஆவலும் கவலையும் ததும்பிய கண்கள் நெருங்கி வந்த ஊர்வலத்தின் மீது லயித்திருந்தன.

நந்தினியோ வீதியில் எட்டிப் பார்ப்பதும் உடனே குந்தவையின் முகத்தைப் பார்ப்பதுமாயிருந்தான்.

கந்தமாறன் அங்கே குடிகொண்டிருந்த மோனத்தைக் கலைத்தான்.

"இல்லை; இவன் வந்தியத்தேவன் இல்லை!" என்றான்.

குந்தவையின் முகம் மலர்ந்தது.

அச்சமயம் அந்த விநோதமான ஊர்வலம் அரண்மனை மாடத்தின் அடிப் பக்கம் வந்திருந்தது.

கயிற்றினால் கட்டுண்டு குதிரை வீரர்களின் மத்தியில் நடந்து வந்தவன் அண்ணாந்து பார்த்தான்.

வைத்தியர் மகன் அவன் என்பதைக் குந்தவை தெரிந்து கொண்டாள்.

அண்ணாந்து பார்த்தவன் ஏதோ சொல்ல எண்ணியவனைப் போல் வாயைத் திறந்தான்.

அதற்குள் அவனை இரு புறமும் பிணைத்திருந்த கயிறு முன்னால் தள்ளிக் கொண்டு போய்விட்டது.

குந்தவை தன் மகிழ்ச்சியை வெளியிட்டுக் கொள்ளாமல் "இது என்ன பைத்தியக்காரத்தனம்? இவனை எதற்காகப் பிடித்து இழுத்து வருகிறார்கள்? இவன் பழையாறை வைத்தியர் மகன் அல்லவா?" என்றாள்.

"ஓ! அப்படியா? என் மைத்துனரின் ஆட்கள் எப்போதும் இப்படித்தான். உண்மைக் குற்றவாளியை விட்டுவிட்டு யாரையாவது பிடித்துக் கொண்டு வந்து தொந்தரவு செய்வார்கள்!" என்றாள் நந்தினி.

இதற்குள் கந்தமாறன் "வந்தியத்தேவன் இவர்களிடம் அவ்வளவு இலகுவில் அகப்பட்டுக் கொள்வானா? என் சிநேகிதன் பெரிய இந்திரஜித்தனாயிற்றே? என்னையே ஏமாற்றியவன் இந்த ஆட்களிடமா சிக்கிக் கொள்வான்?" என்றான்.

"இன்னமும் அவனை உம்முடைய சிநேகிதன் என்று சொல்லிக் கொள்கிறீரே!" என்றாள் நந்தினி.

"துரோகியாய்ப் போய் விட்டான். ஆனாலும் என் மனத்தில் அவன் பேரில் உள்ள பிரியம் மாறவில்லை!" என்றான் கந்தமாறன்.

"ஒருவேளை உம்முடைய அழகான சிநேகிதனை இவர்கள் கொன்று போட்டிருக்கலாம். இரண்டு ஒற்றர்களைத் தொடர்ந்து கோடிக்கரைக்கு இந்த வீரர்கள் போனதாகக் கேள்விப்பட்டேன்" என்று நந்தினி சொல்லிவிட்டு, குந்தவையின் முகத்தைப் பார்த்தாள். "கொன்றிருக்கலாம்" என்ற வார்த்தை குந்தவையைத் துடி துடிக்கச் செய்தது என்பதை அறிந்து கொண்டாள்.

அடி கள்ளக்காரி! உன் பேரில் பழி வாங்க நல்ல ஆயுதம் கிடைத்தது! அதைப் பூரணமாக உபயோகப்படுத்தாமற் போனால் நான் பழுவூர் இளைய ராணி அல்ல! பேறு! பேறு!

குந்தவை தன் உள்ளக் கலக்கத்தைக் கோபமாக மாற்றிக் கொண்டு, "ஒற்றர்களாவது ஒற்றர்கள்! வெறும் அசட்டுத்தனம்! வர வர இந்தக் கிழவர்களுக்கு அறிவு மழுங்கிப் போய் விட்டது! யாரைக் கண்டாலும் சந்தேகம்! இந்த வைத்தியர் மகனை நான் அல்லவா கோடிக்கரைக்கு மூலிகை கொண்டு வருவதற்காக அனுப்பியிருந்தேன்? இவனை எதற்காகப் பிடித்து வந்திருக்கிறார்கள்? இப்போதே போய் உங்கள் மைத்துனரைக் கேட்கப்போகிறேன்!" என்றாள்.

"ஓகோ! தாங்கள் அனுப்பிய ஆளா இவன்? தேவி! சந்தேகம் என்று சொன்னீர்களே? எனக்குக்கூட இப்போது ஒரு சந்தேகம் தோன்றியிருக்கிறது. மூலிகை கொண்டு வருவதற்கு இவனை மட்டும் அனுப்பினீர்களா? இன்னொரு ஆளையும் சேர்த்து அனுப்பினீர்களா?" என்று நந்தினி கேட்டாள்.

"இவனோடு இன்னொருவனையுந்தான் அனுப்பினேன்! இரண்டு பேரில் ஒருவனை இலங்கைத் தீவுக்குப் போகும்படி சொன்னேன்."

"ஆகா! இப்போது எனக்கு எல்லாம் புரிந்து விட்டது! நான் சந்தேகித்தபடிதான் நடந்திருக்கிறது!"

"எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என்ன சந்தேகித்தீர்கள்? என்ன நடந்திருக்கிறது?"

"இனிச் சந்தேகமே இல்லை; உறுதிதான். தேவி! தாங்கள் இவனோடு சேர்த்து அனுப்பிய ஆள் ஏற்கெனவே உங்களுக்குத் தெரிந்தவனா? புதிய மனிதனா?"

குந்தவை சற்றுத் தயங்கி, "புது மனிதனாவது? பழைய மனிதனாவது? காஞ்சிபுரத்திலிருந்து ஓலை கொண்டு வந்தவன்; என் தமையனிடமிருந்து வந்தவன்" என்றாள்.

"அவனேதான்! அவனேதான்!"

"எவனேதான்?"

"அவன்தான் ஒற்றன்! சக்கரவர்த்திக்கு ஓலை கொண்டு வந்ததாகத்தான் இங்கேயும் அவன் சொன்னானாம்......"

"என்ன காரணத்தினால் அவனை ஒற்றன் என்று இவர்கள் சந்தேகித்தார்களாம்?"

"எனக்கென்ன தெரியும் அதைப் பற்றி? அதெல்லாம் புருஷர்கள் விஷயம்! பார்க்கப் போனால், அந்த ஒற்றனும் சந்தேகப்படும்படியாகத் தான் நடந்திருக்கிறான். இல்லாவிட்டால், இரகசியமாக இரவுக்கிரவே ஏன் தப்பி ஓட வேண்டும்? இந்தச் சாது மனிதருடைய முதுகிலே எதற்காகக் குத்திவிட்டுப் போக வேண்டும்?"

"இவருடைய முதுகில் அவன்தான் குத்தினான் என்பதையும் நான் நம்பவில்லை. குத்தியிருந்தால் இவரை மறுபடி தூக்கிக் கொண்டு போய் அந்த ஊமையின் வீட்டில் ஏன் சேர்த்து விட்டுப் போகிறான்?"

"கூட இருந்து பார்த்ததுபோல் சொல்கிறீர்களே, தேவி! என்னமோ அந்த ஒற்றன் பேரில் உங்களுக்கு அவ்வளவு பரிவு தோன்றியிருக்கிறது. அவனிடம் ஏதோ மாய சக்தி இருக்க வேண்டும். இவர்கூட அவனை இன்னும் தம் சிநேகிதன் என்று சொல்லிக் கொள்கிறார் அல்லவா? — எப்படியானால் என்ன? போன உயிர் திரும்பி வரப் போவதில்லை. அவனை இந்த வீரர்கள் கொன்றிருந்தால்......"

குந்தவையின் முகத்தில் வியர்வை துளித்தது. கண்கள் சிவந்தன. தொண்டை அடைத்தது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. "அப்படி நடந்திராது! ஒரு நாளும் நடந்திராது" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டாள்.

"இவர் சொல்லுகிறபடி அந்த ஒற்றன் அவ்வளவு கெட்டிக் காரனாயிருந்தால்......" என்றாள்.

"ஆம், இளவரசி! வந்தியத்தேவன் இந்த ஆட்களிடம் ஒரு நாளும் அகப்பட்டுக் கொண்டிருக்க மாட்டான்!" என்றான் கந்தமாறன்.

"இப்போது அகப்படாவிட்டால் இன்னொரு நாள் அகப்பட்டுக் கொள்கிறான்!" என்றாள் நந்தினி.

குந்தவை பற்களைக் கடித்துக் கொண்டு, "நாளை நடக்கப் போவது யாருக்குத் தெரியும்?" என்றாள்.

பின்னர் ஆத்திரத்துடன், "சக்கரவர்த்தி நோயாகப் படுத்தாலும் படுத்தார்; இராஜ்யமே தலை கீழாகப் போய்விட்டது! மூலிகை கொண்டு வருவதற்கென்று நான் அனுப்பிய ஆட்களைப் பிடிப்பதற்கு இவர்களுக்கு என்ன அதிகாரம்? இதோ என் தந்தையிடம் போய்க் கேட்டு விடுகிறேன்" என்றாள்.

"தேவி! நோயினால் மெலிந்திருக்கும் சக்கரவர்த்தியை இது விஷயமாக ஏன் தொந்தரவு செய்ய வேண்டும்? என் மைத்துனரையே கேட்டு விடலாமே? தங்கள் விருப்பம் ஒரு வேளை அவருக்குத் தெரியாமலிருக்கலாம். தெரிவித்தால் அதன்படி நடந்துகொள்கிறார். இந்தச் சோழ ராஜ்யத்தில் இளைய பிராட்டியின் விருப்பத்துக்கு மாறாக நடக்க யார் துணிவார்கள்?" என்றாள் நந்தினி.

அந்த இரண்டு பெண் புலிகளுக்கும் அன்று நடந்த போராட்டத்தில் நந்தினியே வெற்றி பெற்றாள். குந்தவையின் நெஞ்சில் பல காயங்கள் ஏற்பட்டன. அவற்றை வெளிக் காட்டாமலிருக்க இளவரசி பெரு முயற்சி செய்ய வேண்டியிருந்தது.

இருபத்தோராம் அத்தியாயம்

## பாதாளச் சிறை

**உ**லக வாழ்க்கையைப்போல் அறிய முடியாத விந்தை வேறொன்றுமில்லை. சுகம் எப்படி வருகிறது, துக்கம் எப்படி வருகிறது என்று யாரால் சொல்ல முடியும்? வானம் நெடுங்காலம் களங்கமற்று விளங்கி வருகிறது. திடீரென்று கருமேகங்கள் திரண்டு வந்து எட்டுத் திசைகளும் இருள் சூழ்ந்து இடி இடித்து மின்னல் மின்னி மழை கொட்டு கொட்டு என்று கொட்டுகிறது. உலகிலிருந்து காற்று என்பதே அற்றுப் போய்விட்டதாகச் சில சமயம் தோன்றுகிறது. மரங்களின் இலைகளும் அசையாமலிருக்கின்றன.



திடீரென்று எங்கிருந்தோ ஒரு சூறைக் காற்று வந்து சுழன்று சுழன்று அடிக்கிறது. அதன் வேகத்தில் பெரிய பெரிய மரங்கள் வேருடன் பெயர்ந்து விழுகின்றன. சற்று முன்னால் நேத்ரானந்தமாக வானளாவி நின்று காட்சியளித்த பசுமரச் சோலைகள் இப்போது அனுமார் அழித்த அசோக வனமாக மாறி விடுகின்றன.

குந்தவையின் வாழ்க்கையில் அத்தகைய சூறைக் காற்று இப்போது சுழன்று அடித்துக் கொண்டிருந்தது. சில காலத்துக்கு முன்பு வரையில் அவள் கவலை என்பதை அறியாதவளாயிருந்தாள். வாழ்க்கை என்பது இடைவிடாத ஓர் ஆனந்த உற்சவமாக இருந்து வந்தது. அன்பும் ஆதரவும் ஆடலும் பாடலும் காவியமும் ஓவியமும் அணிபணியும் அலங்காரமும் உத்தியானவனமும் ஒய்யார ஓடமுமே வாழ்க்கை என்று எண்ணும்படியாக நாட்கள் சென்று கொண்டிருந்தன. தந்தையும் தாய்மார்களும் அண்ணனும் தம்பியும் அமைச்சர்களும் ஆசிரியர்களும் தாதிமார்களும் தோழிமார்களும் இளைய பிராட்டியைத் தங்கள் கண்ணின் கருமணியாகப் பாவித்து நடத்தி வந்தார்கள். துயரம் இன்னது என்பது காவியத்திலும் நாடகத்திலும் உள்ள கற்பனை மூலமாகவே அவளுக்குத் தெரிந்திருந்தது.

அத்தகைய பாக்கியசாலிக்குத் துன்பம் வரத் தொடங்கிய போது ஒன்றன் மேலொன்றாகத் தொடர்ந்து வந்து மோதியது. தந்தையின் நிலை கவலைக்கிடமாயிருந்தது. இராஜ்யத்துக்குப் பெரிய சோதனை ஏற்பட்டிருந்தது. தமையனும் தம்பியும் தூர தேசங்களில் இருந்தார்கள். இன்னதென்று சொல்ல முடியாத ஒரு பெரும் விபத்து சோழர் குலத்துக்கு ஏற்படப்போவதாக சோதிடர்களும் நிமித்தக்காரர்களும் மர்மமாகச் சொல்லி வந்



தார்கள். நாட்டில் இரகசிய சதிக் கூட்டங்கள் நடந்து வந்தன. நாட்டின் மக்கள் இனந் தெரியாத பீதியில் ஆழ்ந்திருந்தார்கள்.

வைர நெஞ்சு படைத்த வீரர்கள் வழி வழியாக வந்த குலத்தில் பிறந்த குந்தவை இவ்வளவையும் தீரத்துடன் சமாளிக்கக் கூடிய மனோதைரியம் பெற்றிருந்தாள். குலத்துக்கும் இராஜ்யத்துக்கும் ஏற்பட்டிருந்த எல்லா அபாயங்களையும் தன் கூரிய மதியின் துணையினால் போக்கி விடலாம் என்ற திடமான நம்பிக்கை அவளுக்கு இருந்தது.

ஆனால், அவளுடைய வாழ்க்கையில் ஒரு சிறிய சம்பவம்-எதிர்பாராத ஒரு சந்திப்பு,-அவளுடைய வைர இதயம் இளகவும் மனோ தைரியம் குலையவும் காரணமாகி விட்டது.

வந்தியத்தேவனைக் குந்தவை சந்தித்தபோது,—அது வரையில் மொட்டாக இருந்த அவளுடைய இருதய தாமரை,—மடலவிழ்ந்து மலர்ந்தது.

ஆனால், என்ன துரதிர்ஷ்டம்,-அதே சமயத்தில் ஒரு கரு வண்டு அந்த மலருக்குள் குடிபுகுந்து,—தன் விஷக் கொடுக்கினால் அதன் மெல்லிய இதழ்களைக் கொட்டத் தொடங்கியது! அம்மம்மா! என்ன வேதனை!

அந்த வாணர் குல வீரன் ஒரு வேளை சிறைப்பட்டிருக்கலாம் என்ற எண்ணம் எவ்வளவு வேத

ணையை அளித்தது? அவன் கொல்லப் பட்டிருக்கலாம் என்ற கொடிய வார்த்தை எப்படி அவள் நெஞ்சைப் பிளந்தது? அதை வெளிக் காட்டிக் கொள்ளாமலிருக்க அவள் எவ்வளவு கஷ்டப்பட வேண்டி யிருந்தது?

பெற்றவர்கள், உற்றார்கள், உடன் பிறந்தவர்கள், உயிருக் குயிரான தோழிகள் எவ்வளவோ பேர் இருக்க,- எவனோ வழியோடு போகிறவனைப் பற்றி, — அகஸ்மாத்தாக இரண்டு மூன்று தடவை சந்தித்தவனைப் பற்றி ஏன் இந்த இருதயம் இப்படித் துடி துடிக்க வேண்டும்?

இதை யெல்லாவற்றையும் யோசிப்பதற்கும், காரணகாரியங்களை ஆராய்ந்து முடிவு கட்டுவதற்கும், இப்போது நேரமில்லை. மீனமேஷம் பாராமல், சகுனமும் சகுனத் தடையும் பாராமல், விசாரிக்க வேண்டியதை உடனே விசாரித்து, செய்ய வேண்டியதை உடனே செய்ய வேண்டும்......

ஆகவே அன்று பிற்பகலிலேயே இளைய பிராட்டி சின்னப் பழுவேட்டரையரின் மாளிகைக்கு வருவதாகச் சொல்லி அனுப்பிவிட்டுச் சென்றாள். அந்த மாளிகையின் அந்தப்புர மாதர்கள் இளைய பிராட்டியை ஆர்வத்தோடு வரவேற்றார்கள். அன்பைச் சொரிந்து உபசரித்தார்கள். இளவரசி அவர்களுடன் அளவளாவிச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு சித்திர மண்டபத்துக்குச் சென்றாள். அங்கே சின்னப் பழுவேட்டரையர் காத்திருந்து இளைய பிராட்டியை வரவேற்று, மண்டபத்தில் தீட்டி யிருந்த சித்திரங்களை விளக்கிக் கூற முற்பட்டார். குந்தவையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் வந்தாள்.

கடைசிச் சித்திரத்தண்டை வந்து நின்றதும், குந்தவை காலாந்தக கண்டரை ஏறிட்டுப் பார்த்து, "ஐயா! பழுவேட்டரையர்கள் பரம்பரையாகச் சோழ குலத்துக்கு ஒப்பற்ற சேவை புரிந்து வந்திருக்கிறார்கள்!" என்றாள்.

"அம்மையே! அது எங்கள் பாக்கியம்" என்றார் காலாந்தக கண்டர்.

"அந்த சேவைக் கெல்லாம் ஈடாகக் கூடியது இந்தச் சோழ சாம்ராஜ்யந்தான் என்பதில் சந்தேகமில்லை......"



"தாயே! இது என்ன வார்த்தை?"

"ஆனாலும் சக்கரவர்த்தியின் ஆயுட்காலம் முடிந்து கைலாச பதவியை அடையும் வரையில் தாங்கள் காத்திருக்கலாம் அல்லவா? சாம்ராஜ்ய அதிகாரங்களைக் கைப்பற்றுவதற்கு இவ்வளவு அவசரப்பட வேண்டுமா?"

இந்த வார்த்தைகள் காலாந்தக கண்டரின் இருதயத்தில் கூரிய அம்புகளைப் போல் பாய்ந்தன என்பதை அவருடைய முகம் காட்டியது. அவரது நெற்றியில் வியர்வைத் துளிகள் துளித்து நின்றன. மீசை துடி துடித்தது. கை கால்கள் வெட வெடத்து ஆடின.

காலாந்தக கண்டர் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டு குந்தவையைப் பார்த்து, "அம்மையே! இது என்ன இவ்வளவு உக்கிரம்? சொல்லம்பினாலேயே என்னை யமலோகத்துக்கு அனுப்பி விடுவதென்று உத்தேசமா......?" என்றார்.

"ஐயா! அத்தகைய சக்தி என்னிடம் இல்லை என்பது தங்களுக்கே தெரியும். காலாந்தகரிடம் அணுக யமனே பயப்படுவானே? என் போன்ற பேதைப் பெண்ணால் அது முடியுமா?"




"அம்மணி! இத்தகைய கொடிய வார்த்தைகளைச் சொல்வதைக் காட்டிலும் பழுக்கக் காய்ச்சிய ஈயத்தை என் காதில் தாங்கள் ஊற்றலாம்! தேவி இவ்வளவு மறக் கருணை காட்டும்படி அடியேன் என்ன தவறு செய்தேன்?"

"தங்கள் தவறைப் பற்றிச் சொல்ல நான் யார்? என்னுடைய தவறு இன்னது என்பதைத்தான் தாங்கள் சொல்ல வேண்டும். என் தந்தையின் நோயைத் தீர்ப்பதற்கு மூலிகை கொண்டு வருவதற்காக ஆள் அனுப்பியது என்பேரில் தவறா?"

"இல்லை, அம்மணி, அது ஒருநாளும் தவறாகாது."

"பழையாறை வைத்தியர் மகனைக் கோடிக் கரைக்கு மூலிகை கொண்டு வருவதற்காக நான் அனுப்பினேன் என்பது தங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும், அம்மணி!"

"இன்றைய தினம் அந்த வைத்தியர் மகனைக் கயிற்றால் கட்டி வீதியில் உம் குதிரை வீரர்கள் இழுத்துக் கொண்டு வந்ததைப் பார்த்தேன். கட்டளையிட்டது தாங்கள்தானே? அவனை அனுப்பியவள் நான் என்று தெரிந்துதானே இந்த ஏற்பாடு செய்தீர்?"

"ஆம், பிராட்டி! ஆனால் அவன் ஒற்றன் என்பது தெரியாமல் தாங்கள் அனுப்பியிருக்கலாம் அல்லவா?"

"பழையாறை வைத்தியர் மகனாவது? ஒற்றனாவது? அந்தக் கதையை என்னை நம்பச் சொல்கிறீரா?"

"தாயே! அவனே ஒப்புக் கொண்டிருந்தால் நம்ப வேண்டியதுதானே?"

இளவரசி சிறிது திடுக்கிட்டு, "அவனே ஒப்புக் கொண்டானா? அது எப்படி? என்னத்தை ஒப்புக் கொண்டான்?" என்று கேட்டாள்.

"தன்னோடு வந்த இன்னொருவன் ஒற்றன் என்று இவன் ஒப்புக் கொண்டான். அந்த இன்னொருவன் மூலிகைக்காக உண்மையில் பிரயாணம் புறப்படவில்லை யென்றும், இலங்கையில் யாருக்கோ கடிதம் கொண்டு சென்றதாகவும் இவன் ஒப்புக் கொண்டான்......"

"இவன் பெரிய மூடன்; ஏதாவது உளறியிருப்பான். இவனுடன் சென்ற இன்னொரு ஆளையும் அனுப்பியவள் நான்தான். அது தங்களுக்குத் தெரியும் அல்லவா?"

"தெரியும், தாயே! ஆனால் தங்களை அந்த மனிதன் ஏமாற்றி விட்டான் என்பதும் தெரியும். வந்தியத் தேவன் என்னும் பெயருடைய அவ்வாலிபன் உண்மையில் ஓர் ஒற்றன்தான்......"

"இல்லவே இல்லை. அவன் காஞ்சிபுரத்திலிருந்து என் தமையன் எழுதிய ஓலையைக் கொண்டு வந்தவன்."

"இளவரசி! அவன் சக்கரவர்த்திக்கும் இளவரசரிடமிருந்து ஓலை கொண்டு வந்தான். அதனால் என்ன? ஒற்றர்கள் இப்படி ஏதாவது ஓர் உபாயத்தைக் கடைப் பிடித்துத் தானே தங்கள் வேலையைச் செய்யவேண்டும்?"

"ஐயா! வந்தியத் தேவன் ஒற்றன் என்பதற்கு ருசு என்ன?"

"அவன் ஒற்றன் இல்லாவிட்டால் இராஜபாட்டையில் நடப்பதை விட்டுக் குறுக்கு வழியில் நடப்பானேன்? குடந்தை ஜோதிடரிடம் போய்ச் சக்கரவர்த்தியின் ஜாதக பலனைப் பற்றிக் கேட்பானேன்?"

"சக்கரவர்த்தியின் ஜாதகத்தைப் பற்றி நான் கூடக் குடந்தை ஜோதிடரிடம் கேட்டேன். அதனால் என்ன?"

"சக்கரவர்த்தியின் செல்வப் புதல்வியாகிய தாங்கள் கேட்பது வேறு.

சம்பந்தமில்லாத யாரோ வழிப்போக்கன் கேட்பது வேறு. பகையரசரின் ஒற்றனுயிருந்தால்தான் அப்படி விசாரிக்கத் தோன்றும்.''

"இது தங்கள் ஊகம். வேறு காரணம் உண்டா?''

"பகிரங்கமாக என்னுடைய அநுமதி கேட்டுப் பெற்றுக் கொண்டு தஞ்சைக் கோட்டைக்குள் வந்திருக்கலாம். அப்படிச் செய்யாமல் பழுவூர் முத்திரை மோதிரத்தைக் காட்டி விட்டு ஏன் நுழைய வேண்டும்? பெரிய பழுவேட்டரையர் கொடுத்தார் என்று ஏன் பொய் சொல்ல வேண்டும்?''

"முத்திரை மோதிரம் பின்னே யார் கொடுத்தார்களாம்!''

"அது இன்னும் தெரியவில்லை. கண்டு பிடிக்க வேண்டும்.''

"அதைக் கண்டு பிடிக்க முடியாமல் உங்கள் ஆட்கள் என்ன செய்தார்கள்?''

"அம்மணி, என்னுடைய ஆட்கள் மந்திரவாதிகள் அல்ல. ஒற்றனைக் கண்டு பிடித்துக் கேட்டுத் தானே முத்திரை மோதிரம் எப்படி அவனிடம் வந்தது என்று தெரிந்து கொள்ள முடியும்?''

"அவன் உண்மையைச் சொல்லுவான் என்பது என்ன நிச்சயம்?''

"உண்மையைச் சொல்லும்படி செய்வதற்கு வழிகள் இருக்கின்றன, தாயே! பாதாளச்சிறை இருக்கவே இருக்கிறது. ஒற்றனுக்கு இதுவும் தெரிந்திருக்கிறது. அதனுல்தான் மறுபடியும் தலைமறைவாகி இரவுக்கிரவே கோட்டையிலிருந்து தப்பி ஓடி விட்டான். சம்புவரையர் மகனையும் முதுகில் குத்தி விட்டு ஓடி விட்டான்!''

"அவன்தான் குத்தியவன் என்பதற்கு என்ன அத்தாட்சி?''

"கந்தமாறன் கூறியதுதான்.''

"அது போதாது! அவன் கந்தமாறனைக் குத்தவில்லை யென்று நான் சொல்லுகிறேன்.''

"தாயே! தாங்கள் அருகில் இருந்து பார்த்தீர்களா?''

"பார்க்கவில்லை. ஆனல் ஒருவன் முகத்தைப் பார்த்து அவன் குற்றவாளியா, இல்லையா என்பதை என்னுல் நிர்ணயிக்க முடியும்.''

"அந்தப் பொல்லாத ஒற்றன் பாக்கியசாலி. தங்களுடைய நல்ல அபிப்பிராயத்தை எப்படியோ கவர்ந்து விட்டான். அந்த பாக்கியம் எனக்குக் கிட்டவில்லையே?''

"ஐயா! அவனை மறுபடியும் ஒற்றன் என்று ஏன் சொல்கிறீர்?''

"தாயே! அவன் ஒற்றன் இல்லாவிட்டால் கூத்தாடிகளுடன் சேர்ந்து முகமூடி போட்டுக் கொண்டு ஏன் பழையாறையில் நுழைகிறுன்? மாறுவேடம் போட்டுக் கொண்டு ஏன் கோடிக்கரைத் துறைமுகத்துக்குப் பிரயாண மாகிறுன்? அவன் ஒற்றன் இல்லாவிட்டால் என் ஆட்களைக் கண்டதும் ஒரு நாள் முழுதும் கோடிக்கரையில் ஒளிந்து திரிவானேன்? இரவானதும் படகில் ஏறி இலங்கைத் தீவுக்குப் போவானேன்?''

"ஓகோ! அவன் படகில் ஏறித் தப்பித்துப் போய்விட்டானு? உங்கள் ஆட்கள் அவனைப் பிடிக்க முடியவில்லையா?'' என்னும் குந்தவையின் கேள்விகளில் குதூகலம் தொனித்தது.

"ஆம், தாயே! அந்த மாயாவி ஒற்றன் என் ஆட்களை ஏமாற்றி விட்டுப் போய் விட்டான். இந்த முட்டாள்கள் அவனை விட்டு விட்டு வைத்தியர் மகனைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறுர்கள்...''

"ஐயா! ஒற்றன் எப்படியாவது போகட்டும். வைத்தியர் மகனை நான் அனுப்பி வைத்தேன். அவன் குற்றமற்றவன் என்பது நிச்சயம். அவனை உடனே விடுவித்தே ஆக வேண்டும்.''

"அம்மணி! இவன் ஒற்றனில்லாவிட்டாலும் ஒற்றனுக்கு உடந்தையாயிருந்திருக்கிறுன். ஏதேதோ கட்டுக் கதைகளைச் சொல்லி என் ஆட்களை ஏமாற்றியிருக்கிறுன். ஒற்றன் ஒளிந்திருப்பதற்கும் தப்பிப் படகிலேறிச் செல்வதற்கும் இவன் உதவி செய்திருக்கிறுன்......''

"அதெல்லாம் எப்படியிருந்தாலும் வைத்தியர் மகனை விடுதலை செய்தேயாக வேண்டும்......''

"அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயில்லை. நாட்டின் நாலு புறமும் அபாயங்கள் சூழ்ந்திருக்கின்றன. பகைவர்கள் படையெடுக்கக் காத்திருக்கிறுர்கள். வீரபாண்டியனுடைய ஆபத்துதவிச் சேவகர்கள் சோழ குலத்தைக் கருவறுக்கச் சபதம் செய்திருக்கிறுர்கள். நாடெங்கும் சதிகள் நடந்து வருகின்றன...''




மதராஸ் கார்ப்பரேஷன் கௌன்ஸிலரும் ராமகிருஷ்ண லஞ்ச் ஹோம் புரொப்ரைட்டருமான ஸ்ரீ வி. ஆர். ராமனாதய்யரும் அவரது மனைவியாரும் வடக்கஞ்சேரி மக்களினது சௌகரியத்திற்காகக் கட்டி அன்பளிப்பாக அளித்த மேற்கண்ட லக்ஷ்மி ஆஸ்பத்திரி சென்ற ஜூன் மாதம் 30-ம் தேதியன்று சென்னைப் பிரதமர் கனம் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

---

"ஐயா! சதி செய்பவர்கள் எல்லோரையும் சிறையில் போடுவதாயிருந்தால் சிறையில் இடமே இராது."

"இடம் இருக்கும் வரையில் போடலாம் அல்லவா?"

"உண்மைச் சதியாளரைப் போடுவதற்குக் கொஞ்சம் இடம் மிஞ்சட்டும். ஐயா! வைத்தியர் மகனை உடனே விடுதலை செய்யுங்கள்!"

"அந்தப் பொறுப்பை நான் ஏற்க முடியாது, தாயே!"

"சக்கரவர்த்தியின் கட்டளை வந்தால் செய்வீரா! அதையும் புறக்கணிப்பீரா?"

"அம்மணி! இதற்குச் சக்கரவர்த்தியின் கட்டளை தேவையில்லை. இளைய பிராட்டியின் விருப்பம் எதுவோ, அதுவே சக்கரவர்த்திக்கு வேதக் கட்டளை என்பது உலகமறிந்த செய்தி. இதோ பாதாளச் சிறையின் சாவியைத் தங்கள் கையில் ஒப்புவித்து விடுகிறேன். தாங்களே சென்று கதவைத் திறந்து விடுதலை செய்யுங்கள். இன்னும் யாரையாவது விடுதலை செய்வதாயிருந்தாலும் தாராளமாய்ச் செய்யுங்கள். அதனால் வரும் லாப நஷ்டங்களுக்குப் பொறுப்பு தங்களது!..."

இவ்வாறு சொல்லிக் காலாந்தக கண்டர் ஒரு பெரிய சாவியை எடுத்துக் கொடுத்தார். குந்தவை பொங்கி வந்த தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, "ஆகட்டும், ஐயா! லாப நஷ்டங்களுக்குப் பொறுப்பு நானே ஏற்கிறேன்!" என்று சொல்லிச் சாவியைப் பெற்றுக் கொண்டாள்.

"இந்தச் சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏதாவது பெருந் தீங்கு நேர்ந்தால், அது இரண்டு பெண்களினால்தான் வந்ததாகும்" என்றார் தஞ்சைக் கோட்டைத் தலைவர்.

"நான் ஒருத்தி; அந்த இன்னொரு பெண் யாரோ?"

"பழுவூர் இளையராணி நந்தினி தேவிதான்!"

குந்தவை புன்னகை புரிந்து "சோழ சாம்ராஜ்யத்தின் சர்வாதிகாரியுடன் என்னைக் கொண்டு போய்ச் சேர்க்கிறீர்களே? இது காதில் விழுந்தால் பெரிய பழுவேட்டரையர் தங்களைத் தேசப் பிரஷ்டம் செய்து விடுவார்!" என்று சொன்னாள்.

"ரொம்ப நல்லதாய்ப் போய்விடும்! அதற்கு நான் காத்திருக்கிறேன்" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.



# விமலாவின் விவாகம்

**வி. எஸ். ஆர்.**

ஐந்தாறு வருஷங்களாகச் சேகரன் என் சிநேகிதன்தான். நாங்கள் இருவரும் நெருங்கிப் பழகியிருக்கிறோம். அவன் சிநேகத்தை நான் பாராட்டிப் போற்றி வருகிறேன். நாங்கள் இருவரும் எப்பொழுதும் ஒன்றாகவே விருப்போம். சேகரன் எதிர் வீட்டில்தான் குடியிருந்தான். ஆனால் அநேகமாக அவன் எங்கள் வீட்டில்தான் இருப்பான்.

ஆனால் சில வாரங்களாக நான் வேண்டுமென்றே அவனுடன் அதிகமாகப் பேசாமலிருக்கிறேன். அதற்காக அவனுடன் சண்டை போட்டுக் கொண்டு எதிரியாகி விடவில்லை. வழக்கம் போல் அவனுடன் கலகலப்பாகப் பேச முடியாமலிருப்பது எனக்கு வருத்தத்தைத்தான் அளிக்கிறது. ஆனால் வேறு வழி இல்லையே?

சமீப காலமாகச் சேகரனிடம் பட்டும் படாமலும் நான் நடந்து கொண்டதற்குக் காரணம் என் தங்கை விமலாதான். விமலா பால வயதைக் கடந்து கன்னிப் பருவத்தை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்தாள். அழகின் உருவாக, ஆரோக்கியத்தின் வடிவமாக என் தங்கை விளங்கினாள். கல்யாணமாகாத தங்கை வீட்டில் இருக்கும்போது என்ன இருந்தாலும் ஒரு வாலிபன் அடிக்கடி விஜயம் செய்வது தவறல்லவா? வெளியில் நாலு பேர் நாலு விதமாகப் பேசிக் கொள்வதற்கு இடம் கொடுக்கக் கூடாது அல்லவா?

வீட்டுக்கு நானே தலைவன். என் தந்தை காலமாகி ஐந்து ஆண்டுகள் கடந்து விட்டன. மூத்த புதல்வனான எனக்கே குடும்ப நிர்வாகப் பொறுப்பு ஏற்பட்டது. எனக்கு இரண்டு இளைய சகோதரிகளும் மூன்று சகோதரர்களும் இருந்தனர். அப்பொழுது நான் என்ஜினியரிங் காலேஜில் கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்தேன். விமலா இண்டர்மீடியட் படித்துக் கொண்டிருந்தாள். தகப்பனார் போதுமான சொத்து வைத்துவிட்டுப் போனதால் எங்கள் படிப்புக்குத் தடை ஏதும் ஏற்படவில்லை.

எதற்கெடுத்தாலும் என் புத்திமதியையோ என் உதவியையோ எதிர்பார்த்து நிற்கும் அசட்டுப் பெண்ணல்ல விமலா. அவள் நல்ல புத்திசாலி. எதிலும் தீர்மானமான அபிப்பிராயமுள்ளவள். எதையும் யோசித்துச் சுயமான முடிவுக்கு வரக் கூடியவள். அவளுக்குச் சரியென்று பட்டுவிட்டால் அவள் அபிப்பிராயத்தை மாற்ற யாராலும் ஆகாது. இந்த விஷயத்தில் அவள் எங்கள் தகப்பனாரை உரித்து வைத்திருந்தாள்.

தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் சாமர்த்தியம் அவளுக்கு இருந்த போதிலும் தமையனான நான் என் பொறுப்பை விட்டு விடமுடியுமா? வயது வந்த பெண் இருக்குமிடத்துக்கு அடிக்கடி என் நண்பன் சேகர் வருவதைத் தவிர்க்கவே நான் விரும்பி

னேன். சேகரும் விமலாவும் அடிக்கடி சந்தித்துப் பேசி இருவருக்கும் காதல் ஏற்பட்டுக் கல்யாணம் நடக்கக்கூடும் என்பதை நான் உணராமல் இல்லை. ஆனால் அவ்வாறு நடைபெறாமல், விபரீதத்திலும் முடியலாமல்லவா? சேகர் விமலாவுடன் நெருங்கிப் பழகும் விஷயத்தில் நான் உஷாராக இருக்க வேண்டுமென்று நிர்மானித்தேன்.

என் மனப் போக்கை அறிந்த சேகர் இப்பொழுதெல்லாம் எங்கள் வீட்டுக்கு வருவதில்லை. சேகர் வீட்டுக்கு வாராததை விமலா கவனித்ததாக ஆரம்பத்தில் காட்டிக் கொள்ளவில்லை. ஆனால் சில தினங்களுக்கெல்லாம் சுமார் ஆறு மணிக்கு விமலா வாசலில் நின்று எங்கள் வருகையை எதிர் நோக்குவதை உணர்ந்தேன். பிரதி தினமும் அந்த நேரத்துக்குக் காலேஜ் விளையாட்டு மைதானத்தில் விளையாடி விட்டு நானும் சேகரனும் வீடு திரும்புவோம். சேகர் உடைகளை மாற்றிக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்துவிடுவான். பின்னர் நேரம் போவதே தெரியாமல் நாங்கள் அரட்டையடித்துக் கொண்டிருப்போம். விமலா எல்லோருடனும் பேசுவதைப் போலவே அவனுடனும் கலகலப்பாகப் பேசிச் சிரிப்பாள். அவர்கள் பேச்சிலிருந்து இருவருக்கு மிடையில் காதல் தோன்றியுள்ளதா என்பதை என்னால் அறிய முடியவில்லை.

அன்றொரு நாள் இரவுச் சாப்பாட்டுக்குப் பின் நான் மேல்மாடத்தில் உலாவிக் கொண்டிருந்தேன். அங்கு வந்த விமலா ஏதேதோ வாரக் கதைகளையெல்லாம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாள். கொஞ்சமும் எதிர்பாராத வண்ணம் சட்டென்று, "அண்ணா! உனக்கும் சேகருக்கும் மனஸ்தாபமா என்ன?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் ஒன்றுமில்லையே! ஏன் அப்படிக் கேட்கிறாய்?" என்றேன்.

"இப்பொழுதெல்லாம் சேகர் நம் வீட்டுக்கு வருவதில்லையே என்று கேட்டேன்" என்றாள் விமலா.

"மனஸ்தாபம் ஒன்றுமில்லை. அவனுக்கு வீட்டில் தவிர்க்க முடியாத வேலை ஏதாவது இருந்திருக்கும்" என்று கூறி மழுப்பினேன். ஆனால் அவள் குரலிலிருந்தும் பேசிய தோரணையிலிருந்தும், அவள் சாதாரணமாகச் சேகரைப் பற்றி விசாரித்தாளா, அல்லது அவள் விசாரித்ததற்கு ஏதேனும் விசேஷ அர்த்தம் உண்டா என்பது மட்டும் என்னால் யூகிக்க முடியவில்லை.

சில தினங்கள் சென்றன. சேகர் எங்கள் வீட்டுக்கு வருவது நின்று இரண்டு வாரங்களாயின. காலேஜிலிருந்து வந்த நான், சில தினங்களுக்கு முன் நடந்த பரீட்சையில் எனக்குக் கிடைத்த மார்க்குகளைத் தாயாரிடம் படித்துக் காண்பித்துக் கொண்டிருந்தேன். "ரொம்ப நல்ல மார்க் வாங்கியிருக்கிறாய். ஆமாம், நம் வீட்டுக்கு அடிக்கடி வருவானே சேகர், அவனுக்கு எப்படி? உன்னைவிட அதிகமோ குறைவோ?" என்று விசாரித்தாள் அம்மா.

"நான்தான் எங்கள் வகுப்பில் மூன்றாவது பையன். சேகர் இருபத்தைந்தாவது பையனோ அல்லது முப்பதாவதோ எனக்கு ஞாபகம் இல்லை" என்றேன் பக்கத்தில் இருந்த விமலாவைப் பார்த்தவண்ணம்.

"ஐயைய, சேகர் கெட்டிக்காரர் என் றல்லவா நினைத்தேன். பூ, இவ்வளவு தானா?" என்றாள் விமலா. அத்துடன் அந்தச் சமாசாரம் முடிந்து விட்டது என்று நினைத்தேன். ஆனால் முடியவில்லை.

மறுநாள் காலேஜ் விடுமுறை தினம். காப்பி சாப்பிட்டுவிட்டு அன்றையத் தினசரியைப் படித்துக் கொண்டிருந்தேன். என் நண்பன் சேகரனின் தாயார் உள்ளே பிரவேசித்தாள். அந்த அம்மாளும் என் தாயாரும் நெருங்கிப் பழகியவர்கள். தினமும் ஒரு தடவையாவது அந்த அம்மாள் எங்கள் வீட்டுக்கு விஜயம் செய்வாள். சேகரின் தாயார் சிறிது நேரம் கழித்துக் கையில் அப்பளக் குழவியுடன் திரும்பிச் சென்றாள். உடனே விமலா என் எதிரில் வந்து நின்றாள். அவள் முகம் கோபத்தால் சிவந்திருந்தது.

"எதிர்வீட்டுச் சேகர் பரீட்சையில் முப்பதாவது மாணவன் என்று பொய்தானே சொன்னாய்? அவன் வகுப்பில் முதல் பையனாம். எல்லாப் பாடங்களிலும் சேகருக்குத் தான் முதல் மார்க்!"

"உனக்கு இது எப்படித் தெரியும்?"

"எல்லாம் அவன் தாயாரைக் கேட்டு விட்டேன். நீ சொல்வதெல்லாம் தவறு என்பதை எடுத்துக் காட்ட இதோ இன்னொரு சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது!" என்று சொல்லிவிட்டு என்னை அலட்சியமாகப் பார்த்துவிட்டுப் போனாள்.

எப்பொழுதும் என் மீது குற்றம் கண்டு பிடிப்பதில் விமலாவுக்கு அலாதி ஆசை. இந்த ஆசையினால், சேகரின் தாயாரை விசாரித்து உண்மையை அறிந்து கொண்டாளா, அல்லது சேகரின் மேல் உள்ள

சிரத்தையினாலா என்பது எனக்குத் திட்டமாகத் தெரியவில்லை.

என் சம்பந்தப்பட்டவரையில் சேகரைப் பற்றிச் சிலாக்கியமாகச் சொல்லவில்லை என்றே கங்கணம் கட்டிக் கொண்டிருந்தேன். சேகர் வகுப்பில் முதல் பையன் தான். இந்த உண்மையை நான் விமலாவிடம் கூற விரும்பவில்லை. சேகர் என் நெருங்கிய சிநேகிதன்தான். ஆயினும் கல்யாண விஷயம் பாருங்கள். நான் முன்னெச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டாமா?

* * *

சில தினங்கள் கழித்து எதிர் வீட்டுக்குச் சென்று விட்டு என் தாயார் திரும்பி வந்தாள். வரும்போது அவள் முகம் மலர்ந்திருந்தது. ஹாலில் உட்கார்ந்திருந்த என்னைப் பார்த்து, "அம்பி! எதிர் வீட்டுச் சேகரின் தாயாருடன் பேசிக் கொண்டிருந்தேன். சேகருக்கு நம் விமலாவைக் கொடுக்க முடியுமா என்று கேட்டாள். விமலாவைக் கேட்டுச் சொல்வதாகச் சொல்லிவிட்டு வந்தேன். இரண்டு பேருக்கும் ரொம்பவும் பொருத்தமாக இருக்குமென்று நினைக்கிறேன். நீ என்ன சொல்கிறாய்?" என்றாள்.

"அவர்கள் அந்தஸ்தும் நம் அந்தஸ்தும் சரிப்பட்டு வருமா, அம்மா," என்றேன்.

"ஏன் அவர்கள் நல்ல நிலைமையில் உள்ளவர்கள் மாதிரிதானே இருக்கிறார்கள்?" என்றாள் அம்மா.

"அவன் தகப்பனார் ஏதோ வியாபாரம் செய்கிறார். இந்தக் காலத்தில் ஆயிரம் ஆயிரமாக லாபம் சம்பாதிக்கிறவனும் ஒரு வியாபாரிதான். அவர்கள் ஆடம்பரமாகத் தான் வாழ்க்கை நடத்துகிறார்கள். ஆனால் அவ்வளவும் வெளி வேஷமாக இருந்தாலும் இருக்கலாம்" என்றேன்.

என் பின்னால் வந்து நின்ற விமலாவை நான் அப்பொழுது கவனிக்கவில்லை. "ஆமாம், நானும்தான் பார்க்கிறேன். சேகர் பேச்சை எடுத்தாலே இழிவாகப் பேசுவது தான் அண்ணாவின் வழக்கம். அம்மா! அண்ணா பேச்சை நம்பாதே! நான் சேகரின் தகப்பனாரைப் பற்றி எல்லாம் விசாரித்து வைத்துவிட்டேன். அவர் நடத்தும் கம்பெனியில் நூறு பேர்கள் வேலை செய்கிறார்கள். போனமாதம்தான் சிப்பந்திகளுக்கு மூன்று மாத போனஸ் கொடுத்திருக்கிறார். வருமானம் இல்லாத கம்பெனியில் இப்படி போனஸ் கொடுப்பார்களா? சேகரின் தகப்பனாருக்குப் பத்து லக்ஷம் சொத்து இருக்கிறதாம். சேகர் அவரது ஒரே பிள்ளை.... என் அண்ணா! எதற்காக முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைக்கிறாய்? நாலு வருஷமாய்ப் பழகிய சிநேகிதனைப் பற்றி இப்படித் தாறுமாறாய்ப் பேசுவதுதானா முறை?" என்றாள் விமலா.

"ஆமாம், நானும்தான் பார்க்கிறேன். அம்பி சிலகாலமாய்ச் சேகரைப் பற்றி ஒரு மாதிரியாகத்தான் சொல்கிறான். சிநேகிதர்களுக்குள் ஏதேனும் சண்டையோ என்னவோ" என்றாள் என் தாயார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, அம்மா! சேகர் என் நெருங்கிய சிநேகிதன் என்பது வாஸ்தவம். ஆனால் என் தங்கையின் கல்யாணம் என்று வரும்போது சிநேகிதம் என்பதற்காக என் கடமையை மறந்துவிட முடியுமா?" என்றேன்.

"ஏன்? சேகர் நம் விமலாவுக்குத் தகுந்தவான் இல்லை என்று நினைக்கிறாயா?" என்று கேட்டாள் என் அம்மா.

"ஆமாம், அம்மா! இரண்டு பேருக்கும் அவ்வளவு பொருத்தமாக இருக்குமா என்பதே என் சந்தேகம். விமலாவின் சுபாவம் எனக்கு நன்றாகத் தெரியும். சேகர் அவள் சுபாவத்திற்குத் தகுந்தவான் என்று நான் நினைத்திருந்தால் இந்தச் சம்பந்தத்துக்கு நான் குறுக்கே நின்றிருப்பேனா?"

"ஏன்? என் சுபாவத்தில் என்ன அதிசயத்தைக் கண்டு விட்டாய்? எப்பொழுதும் என் சுபாவத்தைக் கேலி செய்வதே அண்ணாவின் வேலை!" என்று கூறும்போதே விமலாவுக்கு அழுகை வந்து விட்டது. அதைப் பார்த்த எனக்குச் சிரிப்பு வந்து விட்டது.

"நீ ஒன்றும் என்னைப் பரிகாசம் செய்ய வேண்டாம். நான் படித்த பெண் இல்லையா? புத்திசாலி இல்லையா? என் கணவனைத் தேர்ந்தெடுப்பதற்கு எனக்குச் சுதந்திரம் இல்லையா?" என்றாள் ஆத்திரத்துடன்.

"யார் இல்லை என்றார்கள்? மறுபடியும் கேட்கிறேன், அப்படியென்ன சேகர் உனக்குத் தகுந்த அழகும் வசீகரமும் ஆரோக்கியமும் உள்ளவனா? நான் கேட்பதற்காகக் கோபித்துக் கொள்ளக் கூடாது" என்றேன் சற்றுக் கோபமாகவே.

"ஏன்? அவர் அழகுக்கு என்ன? ஆரோக்கியத்துக்கு என்ன? ராஜா மாதிரி இருக்கிறார்.." என்று ஏதோ கோபத்தில் சொல்ல வந்தவள் சட்டென்று தன் பிசகை உணர்ந்து முகத்தை மறைத்துக் கொண்டு உள்ளே ஓடி விட்டாள்.

"அம்மா! உன் பெண் இஷ்டப்படியே செய்து விடு! அப்புறம் என்னைக் குற்றம் சொல்லாதே!" என்றேன் என் தாயாரிடம்.

"ஆமாம், விமலாவின் இஷ்டப்படியே செய்து விடுகிறேன். எனக்கும் இந்த வரனைப் பிடித்திருக்கிறது" என்றாள் தாயார்.

* * *

சில நாட்களுக்கெல்லாம் சேகருக்கும் விமலாவுக்கும் வெகு சிறப்பாகக் கல்யாணம் நடந்தேறியது.

சேகர் ஒரு நாள் என்னைத் தனியாகக் கூப்பிட்டு, "அம்பி! உன்னால்தான் இந்தக் கல்யாணம் நடந்தது. நான் கூட மனத்திற்குள் என்ன வைத்துக் கொண்டு அப்படி நடந்து கொண்டாயோ என்று நினைத்தேன். கடைசியில் உன் யுக்தி பலித்து விட்டது. நானு வருஷமாக உன் வீட்டுக்கு வந்து கொண்டிருக்கிறேன். ஆனால் ஒரு நாள்கூட விமலா அந்நியோன்யமாக என்னுடன் சம்பாஷித்தது கிடையாது. ஆனால் என்னிடம் விரோதம் கொண்டவன் போல் நடித்து என்னைப் பற்றி விமலாவிடம் இழிவாகப் பேச ஆரம்பித்த பிறகுதான் அவள் என் மேல் சிரத்தை கொள்ள ஆரம்பித்தாள். என் படிப்பு, என் அந்தஸ்து, என் அழகு எல்லாம் அவள் கண்ணில் படும்படி செய்தவன் நீதான்..." என்று கூறிக் கொண்டே போனான்.

"சேகர்! என் தங்கையின் சுபாவம் எனக்குத் தெரியாதா? ஏராளமான காதல் புஸ்தகங்களைப் படித்து விட்டு அவள் மூளை குழம்பி யிருக்கிறது. தானும் ஒரு அமர காதலியாகி விட அவள் கனவு கண்டு கொண்டிருந்தாள் என்பது எனக்குத் தெரியும். பெற்றோர், உற்றார், உறவினர் விருப்பத்திற்கு எதிராகத் தான் விரும்பிய காதலனை மணந்து கொள்ள வேண்டுமென்று வெகுநாளாக அவள் நினைத்திருந்ததை நான் ஊகித்துக் கொண்டேன். 'காதல் காடு முரடானது. காதலை அடைய உயிரையும் தியாகம் செய்!' என்று புஸ்தகத்தில் பல பக்கங்களிலும் அவள் எழுதி வைத்திருந்தது எனக்குத் தெரியாதா? சேகர்! உனக்கு எவ்வளவு நற்குணங்கள் இருந்தாலும் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி நான் விமலாவுக்குச் சிபார்சு செய்தால் உடனே, 'மாட்டேன்' என்பாள் என்று எனக்குத் தெரியும். ஆகையினால் தான் அவளே உன்னைக் காதலித்து, சகோதரனின் எதிர்ப்புக் கிடையில் உன்னைக் கல்யாணம் செய்து கொண்ட பெருமை அவளுக்குக் கிடைக்கட்டும் என்றுதான் உன்னை வெறுப்பவன்போல் பாவித்தேன்!" என்றேன்.

"அப்படியா சேதி? நீ வெறுத்ததுபோல் நடித்தது நாடகம்தானா?" என்றாள் எங்கள் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு வந்த விமலா.

"வேறு எப்படி யிருக்க முடியும்? சேகரை வெறுத்ததுபோல் நடித்ததற்குக் காரணம் அவனிடம் உள்ள அன்புதான்" என்று கூறிவிட்டு மெள்ள நழுவினேன்.

இனி எனக்கு அங்கே என்ன வேலை?

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 44. சந்தேக விளக்கம்

கேள்வி :—காப்பியை வேண்டாமென்று சொல்லுகிறீர்களே! அதற்குப் பதில் டீ, கோக்கோ உபயோகிக்கலாமா? ஓவல்டீன் அருந்தலாமா?

பதில் :—இவைகள் எல்லாமே ஆரோக்யத்துக்கு ஏற்ற பானங்களல்ல.

காப்பி, டீ, கோக்கோ, ஓவல்டீன் எல்லாமுமே நமக்கு அவசியமில்லாதவை. ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவித உத்தேபன வஸ்து இருக்கின்றது. காப்பியில் 'காபீன்' என்ற விஷ வஸ்து இருக்கிறது. டீயில் 'டானின்' என்ற விஷ வஸ்து இருக்கிறது. கோக்கோவில் 'தியோப்ரோமைன்', காபீன், டானின் ஆசிட் ஆகிய மூன்றும் இருக்கின்றன. எல்லாமுமே நரம்புகளைத் தூண்டி ஊக்குவிக்கக் கூடியவை. இவைகளை அருந்துவதால் பசித்தீபனம் கெடும். நரம்புத் தளர்ச்சி யுண்டாகும். மூத்திரத்தை அதிகப்படுத்தும். நாம் சாப்பிடும் வஸ்துக்களிலுள்ள உயிர்ச் சத்துக்களைச் சரியாக ஜீரணித்து உடலில் சேர ஒட்டாது. தலைவலி, குமட்டல் முதலியவற்றை உண்டாக்கும். இருதயத்தைப் பலவீனமாக்கும். இன்னும் எத்தனையோ வித

மான கோளாறுகளுக்கும் இந்தப் பானங்களே காரணமாக இருக்கின்றன.

இந்தத் துர்ப்பழக்கங்களை விடுவதற்கு வழி, ஆசனப் பயிற்சியே. எடுத்த எடுப்பில் இப்பழக்கங்களை விட்டுவிட முடியாது. இந்தப் பழக்கங்களை விட்ட பிறகே ஆசனம் பழகவேண்டு மென்பதில்லை. ஆசனங்களைப் பழக ஆரம்பித்துவிட்டால், உடம்பில் தெம்பு, சுறுசுறுப்பு, ஆரோக்யம் எல்லாம் ஏற்பட்டு விடும். பிறகு சிறுகச் சிறுக மேற்படி பானங்களைக் குறைத்து வரலாம். முதலில் டிகாக்ஷனைக் குறைவாய் விட்டுப் பால் அதிகம் சேர்க்கலாம். பிறகு சாப்பிடும் வேளைகளைக் குறைத்துக் கொள்ளலாம். ஒரு நாளில் நாலு தடவை என்று இருப்பதை, மூன்று தடவையாகக் குறைக்கலாம். ஒரு மாத மான பின்பு இரண்டு தடவையாகக் குறைத்துக் கொள்ளலாம். இப்படி, சிறிது சிறிதாகக் குறைத்தால் கஷ்டமாக இருக்காது. பிறகு அந்தப் பானங்களுக்குப் பதிலாக அந்த வேளைகளில் பால் அருந்தலாம்.

சிலருக்குப் பால் அருந்தினால் மந்தமாய் ஜீரணிக்கக் கஷ்டமாய் இருக்கும். அவர்கள் தனியா, (கொத்தமல்லி) சுக்கு தட்டிப் போட்டு, வெல்லம் போட்டுச் சாப்பிடலாம். மற்றும் மிளகு, சீரகம், சுக்கு, கன்னாரி வேர், பரங்கிச் சக்கை இவைகளைச் சமனிடை எடுத்துப் பொடி செய்து வைத்துக் கொண்டு காப்பி போடலாம். இவைகளுக் கெல்லாம் நல்ல வெல்லம், பனை வெல்லம் போட்டே செய்யலாம். அஸ்கா சர்க்கரைக்காக அல்லல்பட வேண்டியதில்லை.

காப்பிக்கு மாற்று வேறு ஒரு நல்ல காப்பி யிருக்கிறது. அதற்கு, காந்தி காப்பி என்று நான் பெயர் கொடுத்திருக்கிறேன். மகாத்மா காந்தி அவர்கள் எழுதிய 'ஆரோக்கிய வழி' என்னும் புத்தகத்தில் இந்தக் காப்பியைப் பற்றி எழுதப்பட்டிருக்கிறது. இந்தக் காப்பியைப் போட்டு நாம் தயாரித்த விவரத்தைச் சொல்லாமல் யாருக்காவது கொடுத்து, 'காப்பி எப்படி இருக்கிறது?' என்று கேட்டால், 'நன்றாய்த் தான் இருக்கிறது. ஆனால் டிகாக்ஷன் சற்று மட்டமாய் இருக்கிறது' என்று சொல்லுவார்கள். அசல் காப்பிக்கு முக்கால் அல்லது முக்காலே அரைக்கால் பங்கு ருசி இருக்கும். ஆனால் காப்பியில் உள்ள கெடுதி இதில் கிடையாது. காபின் என்ற விஷமும் கிடையாது.

சாதாரண கோதுமையை எடுத்து வாணலியில் போட்டு, காப்பிக் கொட்டையை வறுப்பது போலவே நன்றாய்க் கறுக்க வறுக்க வேண்டியது. பிறகு பொடி செய்து காப்பி போடுவதைப் போலவே, ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் பொடி போட்டு, கொதித்த ஜலத்தை அதில் ஊற்ற வேண்டியது. சற்றுப் பொறுத்து, சுத்தமான துணியில், மேற்படி ஜலத்தை வடி கட்டி, சீனி சர்க்கரையோ, நாட்டுச் சர்க்கரையோ சேர்த்து, பால் விட்டுச் சாப்பிடலாம். ஆரோக்கியத்திற்கு ஆரோக்கியம். காப்பிக் கொட்டைக்காகச் செலவிடும் பணம் லாபம். டாக்டர் பில்லும் லாபம்.

இம்மாதிரி உப பானங்களைச் செய்து சாப்பிட்டு, கூட ஆசனங்களும் பழகி வந்தால், காப்பி, டீ, கோக்கோ போன்ற பானங்களைச் சாப்பிட வேண்டிய அவசியம் இராது. அவைகளில் மனதும் நாட்டங் கொள்ளாது. இயற்கை உணர்ச்சி, உடலில் புத்துயிர் பெற்று வளர, பால், மோர், இளநீர், எலுமிச்சம் பழ ரசம் போன்றவைகளையே சாப்பிடச் செய்யும்.

கேள்வி :—நான் மிகவும் மெலிந்திருக்கிறேன். ஜமக்காளத்தில் ஆசனங்கள் செய்தால் எலும்புகள் உறுத்துகின்றன. ஆகையால் மெத்தையை உபயோகப் படுத்தலாமா?

பதில் :—சாதாரணமாய் எல்லோருக்கும் சுத்தமான ஜமக்காளமே நல்லது. சதைப் பிடிப்பு இல்லாதவர்களுக்கு, அதிலும் எலும்பும், தோலுமாய் இருப்பவர்களுக்கு ஒரு அங்குல கனமுள்ள மெத்தை நல்லது. கனமான மெத்தை கூடாது. மெத்தையின் மேல் ஒரு சுத்தமான துணியை விரித்துத்தான் உபயோகிக்க வேண்டும். ஏனெனில், ஆசனங்கள் செய்யும் போது உண்டாகும் வியர்வை மேல் துணியில் ஊறும். அழுக்கும் ஆகும். அதை அவ்வப்போது வாரத்திற்கு ஒரு தடவையாகிலும் மாற்றலாம். அல்லது துவைத்துப் போடலாம். வெறும் மெத்தையானால் அப்படிச் செய்ய முடியாது. ஜமக்காளத்தை உபயோகிப்பவர்களும் அடிக்கடி மாற்ற வேண்டும். அல்லது துவைக்க வேண்டும். ஆசனம் செய்யும் போது அணியும் ஆடையையும் அன்றாடம் மாற்ற வேண்டும். வியர்வை நாற்றம், அழுக்கு கூடாது. சுத்தமாய் இருக்க வேண்டும்.

சிலர், வியர்க்கிறதென்று மின்சார விசிறியைப் போட்டுக் கொள்ளுவார்கள். அதுவும் கூடாது. வியர்ப்பது நல்லது தான். அவரவர்களின் தேக நிலையைப் பொறுத்து வியர்க்கும். மெலிந்தவர்களுக்கு அவ்வளவாக வியர்க்காது. கனமானவர்களுக்கு வியர்க்கும். அதற்காக மின்சார விசிறியைத் திருப்பி விட்டுக் கொள்ளக் கூடாது. வேண்டுமானால் நல்ல காற்றோட்டமுள்ள இடங்களில் ஆசனம் செய்யலாம்.

(தொடரும்)

# பெற்ற மனம்

**ஈசுவர் பெட்லீகர் பரிசுக்கதை**

**—6—**

மூலக்கதை — குஜராத்தி

மொழிபெயர்ப்பு — வாஞ்சி



"உங்களுடைய மகன் மங்குவைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் கொண்டு போய் விடுவது தான் நல்லது" என்று அமிருத் பாயை எத்தனையோ பேர்கள் தினந்தோறும் நச்சரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அவர்கள் எல்லோருக்கும் அமிருத்பாய் ஒரே விதமாகப் பதிலளித்து வந்தாள்.

"மங்குவைப் பராமரித்துக் காப்பாற்ற வேண்டியது என்னுடைய கடமை அல்லவா! அவனுடைய தாயான நான் என் கடமைகளைச் சரிவரச் செய்யவில்லையெனில், பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலுள்ளவர்கள் அவனுக்கு என்ன சாதித்துவிடப் போகிறார்கள்!"

இவ்வாறு சொல்லும்போதெல்லாம் அமிருத்பாயின் கண்களில் நீர் ததும்பியது.

கேட்பவருக்கெல்லாம் இவ்விதம் அமிருத்பாய் பதில் சொல்லி வந்ததால், மேற்கொண்டு அவளை வற்புறுத்துவதால் யாதொரு பயனும் ஏற்படாது என்பதை அவர்கள் தெரிந்து கொண்டார்கள். தவிர மங்குவினிடம் அவளுக்குள்ள எல்லையற்ற பாசம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம்தானே.

பாவம்! மங்குவோ பிறவியிலேயே ஊமை; அத்துடன் புத்தி சுவாதீனமும் இல்லை. அப்படியிருக்கும் அந்தக் குழந்தையை அமிருத்பாய் சிறிதும் அலுத்துக் கொள்ளாமல் எவ்வளவு பாசத்துடன் பராமரித்து வளர்த்து வருகிறாள் என்பதை எல்லோரும் அறிவார்கள்.

மங்குவினிடம் அமிருத்பாய் உயிரையே வைத்திருந்தாள். அமிருத்பாயைப் போல் மங்குவின் மனோநிலையை உணர்ந்து நடப்பவர் இந்த உலகில் வேறு யாருமே இல்லை.

அமிருத்பாயின் இடைவிடாத பராமரிப்பு காரணமாக மங்கு ஆரோக்கியமே உருவெடுத்தாற்போல் காணப்பட்டான். அந்தக் குழந்தையை வேறு யாருடைய பராமரிப்பிலாவது விட்டிருந்தால், அவன் (மங்கு) வெகு காலத்துக்கு முன்பே இறந்து போயிருப்பான் என்பதில் சந்தேகமில்லை.

எனவே, மங்குவின் விஷயத்தில் அமிருத்பாய்க்கு இருந்த இணையற்ற பாசத்தையும் எல்லையற்ற வாத்ஸல்யத்தையும் கடமை உணர்ச்சியையும் கண்டு எல்லோரும் அதிசயித்தனர்.

மங்குவைச் சேர்த்து அமிருத் பாய்க்கு இரண்டு பெண்களும் இரண்டு பிள்ளைகளும் இருந்தார்கள். பிள்ளைகள் வாழ்க்கையில் ஊன்றிக் கொண்டு விட்டார்கள். இருவரும் படிப்பு முடிந்து சமீபத்திலுள்ள பெரிய பட்டணத்தில் உத்தியோகம் பார்த்து வந்தனர். மற்றொரு பெண்ணோ நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டுக் கணவனுடனும் மாமியார் மாமனாருடனும் சந்தோஷமாக இருந்து வந்தாள். எனவே அவர்களைப் பற்றி அமிருத்பாய் சிறிதும் கவலைப்பட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

ஆகையால் அவள் தன்னுடைய முழு அன்பையும் பாசத்தையும் மங்குவின் மீது கொட்டினாள். விசேஷ காலங்களிலோ அல்லது ரஜா நாட்களிலோ அவளுடைய பிள்ளைகள் ஊருக்கு வந்து தங்கள் தாயாருடன் சில நாட்கள் தங்கி விட்டுப் போவார்கள். அப்போது அமிருத்பாயின் வீடெல்லாம் ஒரே கும்மாளமும் குதூகலமும் வேடிக்கையும் விளையாட்டுமாக இருக்கும். அவளுடைய பேரக் குழந்தைகள் வீட்டை இரண்டாகச் செய்து விடுவார்கள்!

மங்குவைக் கொஞ்சுவது போல அமிருத்பாய் தன் பேரக் குழந்தைகளை ஒரு நாள்

கூடக் கொஞ்சியதில்லை. மங்குவைச் சீராட்டுவது போல அந்தக் குழந்தைகளைச் சீராட்டுவதில்லை; அவர்களுடன் வேடிக்கையாக விளையாடுவதும் இல்லை.

அமிருத்பாயின் பிள்ளைகளுக்குத் தங்களுடைய தாயாரின் அத்தகைய பாரபட்சத்தைக் கண்டு மனத்தாங்கல் ஏற்படவில்லை. எனினும் அவர்களுடைய வீட்டுப் பெண்களுக்கு மேற்படி விசித்திரப் போக்கு மிகவும் வேதனையாக இருந்தது. தங்களுடைய குழந்தைகளை அமிருத் பாய் அலட்சியம் செய்வது அவர்களுக்குப் பிடிக்கவே யில்லை.

''புத்தி சுவாதீனமில்லாத மடசாம்பிராணி மங்கு உங்கள் தாயார் கண்களுக்குச் சர்வ லட்சணமும் புத்தியும் வாய்க்கப் பெற்ற சுந்தரியாகத் தோன்றுகிறாள். ஆனால் தன் சொந்தப் பிள்ளைகளின் குழந்தைகளைப் பார்க்கக்கூடப் பிடிக்கவில்லை'' என்று அமிருத்பாயின் வீட்டுப் பெண்கள் தத்தம் கணவரிடம் அடிக்கடி இடித்துக் கூறி வந்தார்கள்.

மங்குவிடம் அமிருத்பாய் காட்டிய எல்லையற்ற பாசம் அவளுடைய வீட்டுப் பெண்களுக்கு அவள் மீது வெறுப்பு ஏற்படும்படி செய்தது. எனினும் அவர்கள் அமிருத்பாயை என்ன செய்ய முடியும்! தங்கள் கணவரிடம் புகார் சொல்லலாம்; அமிருத்பாய்க்கு எதிரில் ஏதாவது பேச முடியுமா!

* * *

அமிருத் பாய்க்குத் தன் பெண் காமுவின் குழந்தைகளிடத்திலும் விசேஷ அன்பு ஏதுவுமில்லை. ஆனால் காமு அமிருத் பாய்க்கு எதிரிலேயே அதைப் பகிரங்கமாகச் சொல்லத் தயங்க மாட்டாள்.

''என்ன அம்மா! நீ இப்படி ஊட்டிச் சீராட்டி வளர்த்ததால்தான் மங்குவுக்கு இருந்த கொஞ்ச நஞ்ச புத்தியும் அடியோடு மழுங்கி விட்டது. ஒரு மிருகத்தை இவ்வாறு சீராட்டிப் பழக்கினால் கூட அதற்குப் புத்தி ஏற்படும். எவ்வளவு பைத்தியமாகத்தான் இருக்கட்டுமே! பன்னிரண்டு வயதான ஒரு பெண்ணுக்கு எந்த இடத்தில் ஸ்நானம் செய்வது, எப்படித் துணி கட்டிக் கொள்வது என்பதுகூடவா தெரியாமல் போய்விடும்! உலகத்தில் இராத அதிசயம்தான்!'' என்பாள்.

''அவள் ஊமையே யன்றி செவிடு அல்ல. நாம் சொல்வது காது கேட்கும்போது, சொல்கிறபடி ஏன் நடக்கக் கூடாது! அவள் சரிவர நடந்து கொள்ளாத போது கன்னத்தில் பளீரென்று நாலு அறை கொடு. பிறகு சரியாக நடக்கிறாளா இல்லையா, பார்'' என்றும் காமு தன் தாயாரிடம் ஆத்திரத்துடன் கூறுவாள்.

அதற்குமேல் காமுவினால் எதுவும் சொல்ல முடியாது. ஏனெனில் காமு மேற்கூறிய விதம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அமிருத்பாயின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருக ஆரம்பித்து விடும். அதனால் காமுவின் மனமும் இளகி விடும்.

இருந்தாலும் காமு தன் மனதைக் கல்லாகச் செய்து கொள்ளுவாள். மங்குவைப் பற்றி ஒளிவு மறைவின்றித் தன் அபிப்பிராயத்தைக் கூறத் தயங்க மாட்டாள்.

''அம்மா! நீ இவ்விதம் கொஞ்சுவதால் மங்குவுக்கு ஆனந்தம் ஏற்படுவதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால், நீதான் மங்குவின் ஜன்ம விரோதி என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். நீ என்றென்றும் இந்த உலகத்திலேயே சிரஞ்சீவியாக இருந்து கொண்டிருக்கப் போகிறாயா! அவளை நீ நாத்திகளின் பராமரிப்பில் விட்டுச் செல்லும்போது, அவளை யார் கொஞ்சுவார்கள்! அவளுக்கு யார் ஸ்நானம் செய்வித்து உடை உடுத்துவார்கள்! அவள் தானேதான் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கும். அப்போது எந்த அம்மா வந்து அவளுக்கு ஊட்டி சிசுருஷை செய்து கொண்டிருப்பாள்!''

இவ்வாறு காமு தன் தாயாரிடம் ஒரு பிரசங்கமே செய்துவிடுவாள்.

''ஆஸ்பத்திரியில் மங்குவின் பைத்தியத்தைத் தெளியவைக்கா விட்டாலும், தானே ஸ்நானம் செய்யவும் உடை உடுக்கவும் அவளுக்கு நர்ஸுகள் கற்றுக் கொடுப்பார்கள். அவ்விதமின்றி மங்குவை இப்படியே வளர்த்துவிட்டால், நீ கண்களை மூடிய பின் உன் பிள்ளைகள் என்ன செய்வார்கள்! சதா சர்வகாலமும் மங்குவைக் கவனித்துக் கொண்டிருப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வேலையில்லையா! அவர்களுடைய மனைவிமார் மங்குவுக்குச் சாப்பாடு போடுவார்களே யொழிய, காலையிலிருந்து மாலைவரையில் சிசுருஷை செய்துகொண்டிருக்க மாட்டார்கள்'' என்றும் காமு சொல்லித் தன்னுடைய பிரசங்கத்துக்கு முத்தாய்ப்பு வைப்பாள்.

மங்குவைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்ப வேண்டும் என்று ஒவ்வொருவரும் யோசனை கூறும்போதெல்லாம் அமிருத்பாய்க்குத் துக்கம் தாங்க முடியாது.

''சொந்தக்காரர்களால் கைவிடப்பட்டு தர்ம ஆஸ்பத்திரியில் இருக்கும் நோயுற்ற மிருகங்களைப் போல மங்குவும் அனாதையாகப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் கஷ்டப்படுவதா!'' என்று அமிருத்பாய் மனம் துடிப்பாள்.

''அதனால் என்ன! பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் மங்கு சாகும்படி நேர்ந்தால், நம்முடைய தொல்லை அவளுக்கு இராமற் போகும்; அவளுடைய தொல்லையும் நமக்கு இராது'' என்பாள் காமு.

மங்குவுக்கு இயற்கையான மரணம் நேரும் பட்சத்தில், அதை மறைமுகமான வரப்பிரசாதமாகவே கருதுவதற்கு அமிருத்பாய் தயாராக இருந்தாள். ஆனால், தன் கையினால் மரண தேவனின் வாயில் கொண்டு போய் மங்குவைத் தள்ளிவிட அவள் விரும்பவில்லை. செத்தால் சாகட்டும் என்று மங்குவைப் பராமரிக்காமல் அலட்சியமாக விட்டு விட அவள் மனம் கொள்ள வில்லை.

சுயநலம் காரணமாக அன்பு காட்டுவதும் உறவு கொண்டாடுவதும் எளிதான காரியம். ஆனால் சுயநலமற்ற அன்பே உண்மையான உறவுக்கு, பந்தத்துக்கு லட்சணம் என்று நினைத்தாள் அமிருத் பாய்.

இரண்டு பிள்ளைகளும் வெற்றிகரமாக வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். காமுவும் நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட்டு, சந்தோஷமாக இருக்கிறாள். இவர்களுடைய தாயார் என்ற

முறையில் தன் கடமையைச் செய்வது சுலப மான காரியம்; சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய காரியம். ஆனால் தன் உதிரத்தில் ஜனித்த, சித்த ஸ்வாதீனமற்ற மங்குவுக்குத் தன் கடமை யைச் செய்வதில்தான் உண்மையான அன்பும் தியாகமும் அடங்கி யிருக்கிறது.

அமிருத் பாய்க்கு அவனுடைய பிள்ளைகளும் பெண்ணும் எவ்வளவோ யோசனை கூறினர். அவளை எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக்கொண் டனர். அமிருத்பாய் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. மங்குவை மறு உலகிற்கு அனுப்புவதற்குப் பைத்தியக்கார ஆஸ்பத்திரி தான் பாதை என்று அமிருத்பாய் நினைத்த தால், அந்த யோசனைக்கு இணங்கவே முடியா தென்று பிடிவாதமாகக் கூறிவிட்டாள்.

• • •

அமிருத்பாயின் மனதை நன்கு அறிந்து கொண்ட அவனுடைய பிள்ளைகள் அவ் விஷ யத்தை மேற்கொண்டு கிளறவில்லை. கிளறித் தான் என்ன பிரயோஜனம்! மூன்று ஐரோப் பிய டாக்டர்கள்தான் மங்குவின் நிலையை நன்கு பரிசோதித்துப் பார்த்து, அவனுடைய சித்தப்பிரமை தீர்க்க முடியாதது என்று நிச் சயமாகக் கூறி விட்டார்களே!

இருந்தாலும் அவர்களுக்கு ஒரு மனத்தாங் கல் இருக்கத்தான் செய்தது. அதாவது அந்த ஊரில் மிக்க அநுபவம் வாய்ந்த டாக்டர் அல்லது நர்ஸின் உதவியையும் அவர்களால் நாட முடியவில்லை. அவர்கள் மங்கு தானாக ஸ்நானம் செய்யவும் உடை உடுக்கவுமாவது பயிற்சியளிக்க முடியும். ஆனால் அமிருத்பாய் மங்குவை அவர்கள் இருக்கும் இடத்துக்கு அனுப்பினால் தானே! அவர்கள் வீட்டுக்கு வந்து மங்குவுக்குப் பயிற்சி யளிப்பதற்கான ஏற்பாடு எதுவும் செய்வது சாத்தியமல்ல.

எனினும், அமிருத்பாய் தனக்குத் தெரிந்த வரையில் பல்வேறு மருந்துகளையும் சிகிச்சை முறைகளையும் நாடுவதைக் கைவிட வில்லை. அதனால் யாதொரு அழைப் பும் இல்லாமலே அவர்கள் வீட் டுக்கு வைத்தியர்கள் வந்து கொண் டிருந்தார்கள். மங்குவுக்குச் சித்த சுவாதீனம் இல்லை என்பதைத் தெரிந்து கொண்ட அங்காடிக் காரர்கள், அதைத் தங்களால் தீர்க்க முடியும் என்று பாசாங்கு செய்து வாசனைத் திரவியங்கள், பச்சிலைகள், பஸ்பங்கள், தைலங்கள் முதலியவற்றை விற்பதற்குக் கொண்டு வந்தார்கள்.

ஆயிரம் சிகிச்சைகளைச் செய்தால் ஏதோ ஒன்று ஆச்சரியகரமாகப் பலனைக் கொடுக்கலாம் என்ற நம் பிக்கை அவளுக்கு இருந்தது. எனவே அத்தகைய வியாபாரிகள் கூறிய யோசனைகளை யெல்லாம் மிகுந்த சிரத்தையுடன் கேட்டு அதன்படி காரியத்திலும் செய்து வந்தாள். சிலர் கூறிய மடத்தன மான யோசனைகளைக் கூட அமிருத் பாய் அலட்சியம் செய்ய வில்லை!

ஜாதகம் பார்ப்பவர்களையும் ஆருடம் சொல்லுவோரையும் கூட அமிருத் பாய் வர வேற்று உபசரிக்கத் தயங்கவில்லை. அவர்களில் ஒருவர், 'அடுத்த டிசம்பர் மாதத்திலிருந்து மங்குவின் கிரகங்கள் இடம் பெயர்கின்றன; அதிலிருந்து அவனுக்கு நல்ல காலம் பிறக்கப் போகிறது, பாருங்கள்!'' என்று சொல்லி வைத்தார்.

அவ்வளவுதான்! டிசம்பர் மாதம் எப்போது வரப் போகிறது என்று அமிருத்பாய் ஆவ லுடனும் பயபக்தியுடனும் எதிர்பார்த்து வந்தாள்!

டிசம்பர் மாதம் மங்குவுக்குப் பதினாறு வயது பூர்த்தியாகுமாதலால், அத்துடன் மங்குவைப் பிடித்த கஷ்ட காலம் எல்லாம் பறந்தோடி விடும் என்று அமிருத் பாய் மிகுந்த நம்பிக்கை யுடன் இருந்து வந்தாள். டிசம்பர் மாதம் நெருங்க நெருங்க அமிருத்பாய்க்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை.

'' காமுவுக்குப் பதினாறு வயது நிரம்பியதும் கல்யாணம் ஆயிற்று. மங்குவுக்கும் சித்தம் சரியாக இருக்குமாயின், பதினாறு வயதில் கல்யாணமாகி விடும். டிசம்பர் மாதம் மங்கு வுக்குக் குணம் ஏற்பட்டு விட்டால்...அவனுக்கு இருக்கும் அழகில், மாப்பிள்ளை அவளைப் பார்த்தவுடனேயே மயங்கி விடுவான்' என்ற எண்ணங்கள் வேறு அமிருத்பாயின் மனதில் பிரமாதமாக அலைமோதின!

மங்குவின் கல்யாணத்துக்காக அமிருத் பாய் மனதுக்குள் திட்டம் போடும்போது தன் னைத் தானே மறந்து விடுவாள். காமுவுக்குக் கல்யாணம் நடந்த போது அமிருத்பாய் குடும் பத்தினர் அவ்வளவு சௌகரியமான நிலைமையில் இல்லை. ஆனால் இப்போது அமிருத்பாயின் பிள்ளைகள் பணத்தில் மிதந்து கொண்டிருக்கி றார்கள். எனவே, மங்குவின் கல்யாணம் சம்பந்தப்பட்டவரையில் பணச் செலவைப்





கடைச் சிப்பந்தி :— கடையில் காலணாவுக்குக் கூட வியாபாரம் இல்லை. எப்பொழுதும் ஈயை ஓட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியிருக்கிறது !

கடை முதலாளி:— அதற்கு என்ன செய்யச் சொல்கிறீர்கள் ?

சிப்பந்தி:— ஈ ஓட்டுவதற்கு வேறு ஒரு ஆள் நியமித்தால் சௌகரியமாக இருக்கும் !

---

பற்றிச் சிறிதும் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. கல்யாணம் சீரும் சிறப்புமாக நடைபெறும் என்பதிலும் சந்தேகமில்லை.

ஒரே ஒரு நாள் தப்பித்தவறி மங்கு தானாகவே ஸ்நான அறைக்குச் சென்று பிறர் உதவியின்றி ஸ்நானம் செய்து விட்டான். அதைக் கண்டு அமிருத் பாய்க்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. அன்றைய தினத்திலிருந்து அமிருத்பாய் யாரைக் கண்டாலும் அதைப் பற்றிப் பெருமை யடித்துக் கொண்டாள்.

"ஜோஸ்யர் சொன்னது வீணாகுமா ! பார் ! மங்கு அன்றொரு நாள் என் உதவியின்றி தானாகவே ஸ்நானம் செய்து விட்டான். இனி அவன் நிலைமை கொஞ்சம் கொஞ்சமாக அபிவிருத்தி யடைந்துவிடும்" என்று சொல்லிய வண்ணமாக இருந்தாள் அமிருத் பாய்.

பதினாறு வயது நிரம்பப் போகும் மங்கு சிறு குழந்தையைப் போல் மண்ணில் உட்கார்ந்து கொண்டு விளையாடுவான். "கண்ணே ! மங்கு ! மண்ணில் விளையாடினால் கை அழுக்காகி விடாதா ! எழுந்து வா, அம்மா !" என்று அமிருத்பாய் அவனைப் பார்த்துக் கொஞ்சுவாள் ; வாரியணைத்து முத்தம் கொடுப்பாள்.

ஒரு நாள் அமிருத்பாய் அவ்விதம் கூறிய போது மங்கு தற்செயலாக எழுந்து வரவே அமிருத் பாயின் மகிழ்ச்சி எல்லை கடந்தது. "மங்குவைப் பார் ! இவனைப் பைத்தியம் என்று சொல்பவர் தான் முழுப் பைத்தியம் ! நான் 'எழுந்து வா' என்று சொன்னதும் எழுந்து வந்து விட்டானே" என்று பல நாட்கள் வரையில் எல்லோரிடமும் அமிருத்பாய் மகிழ்ச்சி பொங்கச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

அமிருத்பாய் வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த டிசம்பர் மாதம் வந்து போய்விட்டது. ஆனால், மங்குவின் நிலைமையில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. இரகங்கள் அமிருத்பாயையும் மங்குவையும் ஏமாற்றி மோசம் செய்து விட்டன !

* * *

இந்தச் சந்தர்ப்பத்தில்தான், அந்தக் கிராமத்திலே ஒரு சம்பவம் நிகழ்ந்தது. பெண்கள் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்த குல்ஸுமா என்ற சிறுமிக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்துவிட்டது. மங்குவைப் போல் அவளுக்கும் ஸ்நானம் செய்யவோ, தன் உடையை உடுத்திக் கொள்ளவோ தெரியவில்லை.

இதைக் கேள்வியுற்ற அமிருத்பாய் மிகவும் மனம் வருந்தினாள். இருந்தாலும் மேற்படி சம்பவம் அவளுக்கு ஒரு விதத்தில் ஆறுதல் அளித்தது. மங்கு பிறவியிலேயே பைத்தியம். ஆனால் முற்றிலும் சித்த சுவாதீனத்துடன் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்த குல்ஸுமாவுக்கு எப்படிப் பைத்தியம் பிடித்தது !

குல்ஸுமாவைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் விட்டிருப்பதைக் கேட்ட அமிருத்பாய் இன்னும் அதிக வருத்தமடைந்தாள்.

"குல்ஸுமாவின் தாயார் உயிருடனிருந்தால் அந்தக் குழந்தையை ஒருகாலத்திலும் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் விட்டிருக்க மாட்டார்கள். இந்த உலகத்திலே தாயை இழந்த குழந்தைகள் நிர்க்கதியாகத் தவிக்க வேண்டியதுதான்" என்று அமிருத்பாய் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

தான் மரணமடைந்ததும் தன் பிள்ளைகள் மங்குவைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விடுவார்கள் என்ற எண்ணம் அமிருத்பாய்க்கு மிகுந்த வேதனையை உண்டாக்கியது. அதனால் அவள் உடல் முழுதும் நடுங்கியது. அந்த எண்ணத்தையே அவளால் சகிக்க முடியவில்லை.

ஒரு மாதம் சென்றது. குல்ஸுமாவின் நிலைமை அபிவிருத்தி யடைந்து வருவதாகக் கூறினார்கள். ஆஸ்பத்திரிக்குப் போனபின் குல்ஸுமாவுக்குச் சில நாட்கள் வரையில் விலங்கு போட்டு வைத்திருந்தார்கள். இப்போது விலங்குகள் போடுவதில்லை. அவள் முன் போல் தனக்குத் தானே திங்கு எதுவும் இழைத்துக் கொள்வதில்லை. பிறரையும் அடித்துக் காயமேற்படும்படி செய்வதில்லை. அவள் இப்போது தானாகவே ஸ்நானம் செய்து உடையும் உடுத்திக் கொண்டாள். நாள் முழுதும் பாடுவதைத் தவிர, குல்ஸுமாவிடம் சித்தசுவாதீனம் இழந்ததற்கான அறிகுறி எதுவும் இல்லை. இன்னும் மேற்கொண்டு ஒரு மாத காலத்தில் குல்ஸுமா பூரணமாகக் குணமடைவாள் என்றும் டாக்டர்கள் நிச்சயமாகக் கூறினர்.

முற்றிலும் சொஸ்தமான பிறகும்கூட, குல்ஸுமா டாக்டர்களின் யோசனைக் கிணங்க மூன்றாவது மாதமும் ஆஸ்பத்திரியிலேயே இருந்தாள். அவள் அங்கிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்த பின் கிராம ஜனங்கள் யாவரும் கூட்டம் கூட்டமாக அவளைப் பார்க்கச் சென்றார்கள். அவர்களெல்லோருக்கும் முதலில் அமிருத் பாய்தான் சென்றாள்.

குஸும்மா பூரண குணமடைந்ததைக் கண்ட கிராம ஜனங்கள், அமிருத் பாய்க்கும் யோசனை கூறத் துணிந்தார்கள். "பாவம்! குஸும்மாவைப்போல் மங்குவுக்கும் உடம்பு சொஸ்தமாக வேண்டாமா! டாக்டர்களை நம்புங்கள், அத்தை! பேசாமல் அவளை ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேருங்கள்" என்று வற்புறுத்தினார்கள்.

அத்தகைய யோசனையை அமிருத்பாய் மறுக்காமல் இருந்தது அதுதான் முதல் தடவை! அவர்கள் கூறுவதை அமிருத்பாய் பொறுமையுடன் கேட்டாள். தனக்குள் இதைப் பற்றித் தீவிரமாக ஆலோசிக்கலானாள்.

மறுநாள் அவள் குஸும்மாவைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து, பைத்தியக்கார ஆஸ்பத்திரியைப் பற்றிய எல்லா விவரங்களையும் விஸ்தாரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டாள். தாயினும் கைவிடப்பட்டவர்களிடம் டாக்டர்களும் நர்ஸுகளும் அன்போ, இரக்கமோ காட்ட மாட்டார்கள் என்ற எண்ணம் அமிருத் பாயின் மனதில் வேரூன்றி யிருந்தது. ஆனால் குஸும்மா அந்த எண்ணத்தைத் தவிடு பொடி யாக்கிவிட்டாள்.

நோயாளிகள் பிடித்துத் தள்ளினால்கூட, அடித்தால்கூட டாக்டர்களும் நர்ஸ்களும் பொறுமை இழப்பதில்லை என்றும், கோபமடைவதில்லை என்றும் குஸும்மா கதை கதையாகச் சொன்னாள். அதனால் அமிருத் பாய்க்கு ஆஸ்பத்திரியைப் பற்றிய தப்பெண்ணம் மறைந்து, நல்லெண்ணமும் நம்பிக்கையும் மதிப்பும் ஏற்பட்டன. ஆஸ்பத்திரியில் உள்ள நோயாளிகளை டாக்டர்களோ மற்றவர்களோ அடிப்பதில்லை என்பதையும் அமிருத்பாய் குஸும்மாவிடமிருந்து தெரிந்து கொண்டாள்.

எனவே, அமிருத்பாயின் மனதில் ஒரு புதிய நம்பிக்கை உண்டாயிற்று. ஆஸ்பத்திரியில் சேர்த்தால் மங்குவுக்குப் பைத்தியம் தெளியலாம். தெளியாது என்று யார் சொல்ல முடியும்! அமிருத்பாய் எவ்வளவோ பரிகார முறைகளைக் கைக்கொண்டு பார்க்கவில்லையா! கடைசியாக ஆஸ்பத்திரியிலும் சேர்த்துப் பார்ப்பதில் என்ன நஷ்டம்! அங்கிருந்தும் எதுவும் ஏற்படாவிட்டால் அவளைத் திரும்பவும் எந்த க்ஷணத்திலும் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்துவிடலாம் அல்லவா!

கடைசியாக மங்குவைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேர்த்து விடுவதென்று அமிருத்பாய் தீர்மானித்தாள். அவ்விஷயத்தை அவள் தன் மூத்த பிள்ளைக்கும் அறிவித்து ஒரு நீண்ட கடிதம் எழுதினாள்.

* * *

அன்றைய தினத்திலிருந்து அமிருத்பாய்க்கு இரவில் தூக்கமே வரவில்லை. மங்குவை ஆஸ்பத்திரிக்கு அனுப்புவதென்ற தீர்மானம், வாழ்க்கையில் தனக்கு ஏற்பட்ட ஒரு பெரும் தோல்வி என்று அவளுக்குத் தோன்றியது. அந்த எண்ணம் அவள் மனதை அரித்துத் தின்னத் தொடங்கியது.

மங்கு விஷயத்தில் அவளுக்கு ஏற்பட்ட நம்பிக்கை உண்மையான நம்பிக்கையல்ல, போலி நம்பிக்கைதான். ஏனெனில், மங்குவைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்ப வேண்டும் என்று அமிருத்பாய் தீர்மானித்ததற்கு மற்றொரு முக்கிய காரணம் உண்டு.

மங்கு எப்போதும் குழந்தையாக இருக்கப் போவதில்லை. அமிருத் பாய்க்கோ வயதாகி விட்டது. கிழவியைக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்பதில் நாட்டுப் பெண்களுக்குக் கொஞ்சமும் அக்கறையில்லை. அவ்விருவரில் ஒருவராவது தன்னுடன் வந்து இருக்கும்படி அமிருத் பாயை இது வரையில் ஒரு தடவையாவது கூப்பிட்டார்களா? இல்லை. தன் பிள்ளைகளைச் சொல்வதில் என்ன பயன்! இந்தக் காலத்துப் பிள்ளைகள்தான் மனைவிமார் சொல்கிறபடி ஆடுகிறார்களே! ஏதோ கடவுளின் கருணை யிருந்தால் மங்கு குணமடைவாள். இல்லாவிடில் அவளுக்கு ஆஸ்பத்திரி வாழ்க்கையாவது பழக்கமாகிவிடும் அல்லவா! பிறகு அமிருத்பாய், ஆஸ்பத்திரியில் மங்குவைக் கவனித்துக் கொள்வார்கள் என்ற ஆறுதலுடன் அமைதியாகக் கண்ணை மூடலாமல்லவா!

இத்தகைய சிந்தனைகள் அமிருத்பாயின் மனதில் ஊசலாடின. அவள் படுக்கையில் படுத்தபடியே தாரை தாரையாகக் கண்ணீர் விட்டாள். அமிருத்பாய் தன் மனதை எவ்வளவு சமாதானம் செய்து கொண்ட போதிலும், மங்கு விஷயத்தில் அவள் சலித்துப் போய் விட்டதாகவே அவளுடைய மனச்சாட்சி உறுத்தியது.

அவள் நடுநிசிக்குத் திடீரென்று எழுந்து உட்கார்ந்தாள். "மங்கு விஷயத்தில் எனக்கு அலுப்பும் சலிப்பும் ஏற்பட்டு விட்டதா?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

'ஆம், ஆம்! உன் சகிப்புத் தன்மைக்கு எவ்வளவு எல்லை உண்டோ அந்த எல்லை வந்து விட்டது' என்று அவளது மனச்சாட்சி மேலும் மேலும் இடித்துக் கூறியது.

"மங்குவைப் பற்றி நான் என் பிள்ளைக்கு எழுதியது பெரும் தவறு. மழைக் காலத்தில் அவளை ஆஸ்பத்திரிக்கு அனுப்ப வேண்டிய



வருமானவரி ஆபீஸ்காரர் :—செல்லரெங்கன் இன்னும் வருமான வரி கட்டவில்லை. தனக்கு வரவை விடச் செலவுதான் அதிகம் என்று எழுதியிருக்கிறார்......

ஆபீஸர் :—அப்பொழுது அவர் செலவுதான் அதிகம் என்றால் செலவின்மேல் வரியைப் போட்டுவிடும்.

அவசரம் என்ன ஏற்பட்டு விட்டது! இரவில் அவளுக்கு அடிக்கடி போர்வையை எடுத்துப் போர்த்த வேண்டியிருக்கிறது. ஆஸ்பத்திரியில் அவளுக்கு யார் போர்வையை எடுத்துப் போர்த்துவார்கள்!'' என்றெல்லாம் அமிருத்பாய் எண்ணினாள்.

அவளுடைய பிள்ளை தாமதியாமல் கிராமத்துக்கு வந்து சேர்ந்தான். அவன் மாஜிஸ்திரேட்டின் உத்தரவைக் கூடப் பெற்றுக்கொண்டு வந்தான். மங்குவை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல இன்னும் ஒருவாரம் கூட இல்லை. அவளை ஆஸ்பத்திரியிலேயே விட்டுவிட்டுக் கை கழுவிவிட வேண்டும் என்பது தான் தன் பிள்ளையின் நோக்கம் என்று எண்ணினாள் அமிருத்பாய். அவன் தன் செல்வாக்கை உபயோகித்து, சிறிதும் தாமதமின்றி டாக்டருடைய அனுமதியையும் மாஜிஸ்திரேட்டின் அனுமதியையும் பெற்று வந்தான் அல்லவா!

மங்கு கோடை காலத்தில் தான் ஆஸ்பத்திரிக்குச் செல்ல வேண்டும் என்று அமிருத்பாய் கருதினாள். ஆனால் தன் அபிப்பிராயத்தைத் தன் பிள்ளையிடம் கூறும் தைரியம் அவளுக்கு ஏற்படவில்லை. அவன் மிகவும் சிரமப்பட்டு உத்தியோகத்திலிருந்து லீவு எடுத்துக்கொண்டு வந்திருப்பதுடன், ஆஸ்பத்திரியில் சேர்ப்பதற்கு 'பர்மிட்'டும் வாங்கி வந்திருக்கிறான். அப்படியிருக்க, அமிருத்பாய் எல்லா ஏற்பாடுகளையும் வீணாக்குவது நியாயமாகுமா!

அமிருத்பாய் இரவு கண்ணைக் கொட்டவே இல்லை. மறுநாள் காலையில் எழுந்ததும் தான் மங்குவுடன் ஆஸ்பத்திரிக்குச் செல்லுவதில்லை என்று முதலில் நினைத்தாள். அவள் மங்குவை விட்டு எவ்வாறு பிரிந்திருக்க முடியும்!

ஆஸ்பத்திரியில் மங்குவின் வாழ்க்கை எப்படியிருக்கும்! சௌகரியமாக இருக்குமா என்பதைத் தன் கண்ணால் நேரில் பார்த்தாலன்றி அமிருத்பாய்க்கு மன நிம்மதி ஏற்படாது. எனவே, அவளும் மங்குவுடன் செல்லுவது என்று தீர்மானித்து, பிரயாணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தாள்.

வீட்டிலிருந்து வெளியே கிளம்பியதும் அமிருத்பாய்க்குத் துக்கம் தாங்க முடியவில்லை. அவளுடைய கண்கள் மங்குவை விட்டு அகலவே இல்லை. மங்கு புத்தம் புதிய வர்ணச் சேலை உடுத்திக் கொண்டிருந்தது அமிருத்பாய்க்குக் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. மங்கு தன் தாயாரைப் பார்த்து விளையாட்டாகச் சிரிக்கவே, அமிருத்பாய்க்கு ஹிருதயமே வெடித்து விடும்போல் இருந்தது.

ஒரு மிருகம்கூடதான் வழக்கமாகக் கட்டப்பட்டிருந்த கம்பத்தை விட்டுப் புதிய சொந்தக்காரரிடம் செல்ல மனம் கொள்ளாது. அப்படியிருக்க மங்கு யாதொரு உணர்ச்சியுமின்றி ஆஸ்பத்திரிக்குப் புறப்பட்டது அமிருத்பாயை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது.

அவள் வாசற்படிக்கு அருகிலேயே விழுந்து விட்டாள். ''சித்த சுவாதீனம் இல்லாத இந்தப் பெண்ணுக்கு கதி யார்! அவளுடைய சொந்தத் தாயார்கூட அவளைக் கைவிட்டு விட்டாள்'' என்று மீண்டும் அமிருத்பாயின் மனச்சாட்சி இடித்துக் காட்டியது.

அந்த நிலையில் தன் தாயாரைப் பார்த்த அவளது பிள்ளையின் மனமும் நைந்து உருகியது. அவன் வருத்தத்தினால் தள்ளாடிக் கொண்டே வண்டிக்கு அருகில் சென்று, ''நாம் புறப்படுவதற்கு நாழியாகிவிட்டது அம்மா'' என்றான்.

அக்கம் பக்கத்திலுள்ள பெண்கள் மங்குவைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு சென்றார்கள். மற்றும் சிலர் அமிருத்பாயைத் தாங்கிக்கொண்டு சென்றார்கள். அவளது வேதனையும் துக்கமும் எல்லை கடந்து விட்டன. இரண்டு பெண்கள் அமிருத்பாயை வண்டியில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

[அடுத்த இதழில் முடியும்]




முதல் ரேஷன் ஆபீஸ்காரர் :—என்ன யோசிக்கிறீர்கள்? ஐம்பது பேருக்கு மேல் சாப்பிடுகிறார்களே, கேஸ் பிடிக்கலாமா?

இரண்டாமவர் :—ரொம்பப் பசியாக இருக்கிறது. நாமும் இந்தப் பந்தியில் சாப்பிட்டு விட்டு, அடுத்த பந்தியில் பிடித்துக் கொள்ளலாம்!

# Fordson
## *Major* TRACTOR

குறைந்த செலவில்
அதிகமான
சக்தி

ட்ராபாரில்
சக்தி

புல்லியில்
சக்தி

பளுவ தூக்குமிடத்தில்
சக்தி

பவர் டேக்-ஆபில்
சக்தி



# போர்ட்ஸன்

மேஜர் டிராக்டர்

ஹைட்ராலிக் லிப்டுடன்
போர்ட்ஸன் உபகரணங்களுக்கு




போர்டு மோட்டார் கம்பெனி ஆப் இந்தியா லிட்.,
பம்பாய்.



பாப்பா மலர்

சரவணன்

# கிணற்றுக் [illegible]

ரா.நா.

## 4. பகதூராவின் அதிர்ஷ்டம்

ஏராளமான பொன்னைக் கண்டதும் கிழவனது திறந்தவாய் மூடவேயில்லை. பேச்சு மூச்சு அற்றவனாகச் சிறிது நேரம் அப்படியே நின்றான்.

"ஐயா, இந்தப் பொன் குவியல் அத்தனையும் வைத்துக் கொண்டு இந்த ஏழை என்ன செய்யப் போகிறேன்? தயவு செய்து தாங்கள் இந்தத் திரவியத்தில் பாதியை எடுத்துக் கொண்டு போகவேண்டும். என் வேண்டுகோளைத் தட்டாதீர்கள். பார்க்கப்போனால் இந்த ஐம்பது பித்தளை வாளிகளில் உள்ள பொன் துகள் அத்தனையும் தங்களைச் சேர வேண்டியது. தாங்கள்தானே அவற்றைக் கண்டெடுத்தீர்கள்?" என்று அன்போடு கூறி, கிழவன் இருபத்தைந்து பித்தளை வாளிகளைத் தனக்கு வைத்துக் கொண்டான்; மிகுதியாயுள்ள இருபத்தைந்து வாளிகளை இளவரசன் கமரல்ஸமானுக்கென்று தனியாக எடுத்து வைத்தான்.

அந்த இருபத்தைந்து வாளிகளையும் கப்பலுக்கு எப்படி அனுப்பி வைப்பது என்று கிழவனுக்குக் கவலையாய்ப் போய் விட்டது. ஏனென்றால் பித்தளை வாளிகளில் இருப்பது தங்கம் என்று வேறு யாருக்கும் தெரியக் கூடாது. இதற்குக் கிழவன் யோசித்து ஒரு யுக்தி கண்டு பிடித்தான்.

கடைக்குச் சென்று ஐம்பது பானைகள் வாங்கி வந்தான் கிழவன். ஒவ்வொரு பானையிலும் ஓரளவு தங்கத் தூளைப் போட்டு அதன்மேல் நிறைய ஆளி இலையை வைத்து மூடிவிட்டான்.

ஆளி இலைக்கு இபனி நாட்டில் கிராக்கி அதிகமாக இருந்தபடியினால் இந்த நாட்டிலிருந்து ஏராளமாக ஆளி இலை ஏற்றுமதி ஆவது வழக்கம். இந்தப் பானைகளைப் பார்ப்பவர்கள் ஆளி இலைகள் தான் போகின்றன என்று நினைத்துக் கொள்ளட்டும் என்று கிழவன் தீர்மானித்தான்.

கிழவன் கொடுத்த சட்டிகளில் ஒன்றில் தான் கமரல்ஸமான் தன் காதலியின் கவசத்தையும் ஒளித்து வைத்தான். பிறகு அந்தப் பானைகள் துறை முகத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டன.

கமரல்ஸமான் புறப்பட வேண்டிய சமயத்தில் கிழவன் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டான். கமரல்ஸமான் அவனைக் கடைசி முறையாகப் பார்த்து விட்டு விடை பெற்றுச் செல்ல வந்த சமயம் கிழவன் இறந்தே போய் விட்டான். தன்னை இவ்வளவு நாட்கள் வைத்துப்

பட்சமாகக் காப்பாற்றிய கிழவனின் உடலை அடக்கம் செய்யாமல் புறப்படக் கமரல்ஸமானுக்கு இஷ்டமில்லை. அவனுக்கு உதவி செய்ய ஒருவருமில்லாததால் சடங்குகள் முடிவு பெறச் சாயங்காலமாகி விட்டது.

உடனே துறைமுகத்திற்கு ஓடினான். அங்கே கப்பல் தலைவன் இளவரசனுக்காக மூன்று மணி நேரம் காத்துப் பார்த்து விட்டு அவன் வராமையால் கப்பலைச் செலுத்திக்கொண்டு போய்விட்டான். மறுபடியும் ஏமாற்றமடைந்த கமரல்ஸமான் மனமுடைந்து உட்கார்ந்து விட்டான்.

கமரல்ஸமான் வருத்தத்திற்குக் கப்பல் தவறியது மட்டும் காரணமல்ல. தான் கண்டெடுத்த புதையலும் அதை விட முக்கியமான தன் காதலியின் கவசமும் கப்பலோடு போய் விட்டதுதான் அவன் வருத்தத்தை அதிகரிக்கச் செய்தது.

மறுபடியும் கிழவனின் குடிசைக்குத் திரும்பி வந்து கிழவனின் தங்கத்தையும் மண் சட்டிகளில் போட்டு ஆளி இலைகளால் மூடி வைத்துவிட்டு, கமரல்ஸமான் ஆண்டவனை நினைத்துக் கொண்டு இன்னுமோர் வருஷம் காத்திருந்தான்.

இளவரசனன்றிப் புறப்பட்ட கப்பல் இபனித் தீவுக்குச் சென்றது. கப்பல் வந்த விஷயம் அரண்மனை வட்டாரங்களுக்குத் தெரிந்தது.

இபனி நாட்டை ஆண்டுவந்த ஆண் வேஷத்திலிருந்த பகதூரா தனது கணவனைப் பற்றிய தகவல் ஏதாவது தெரியும் என எண்ணித் துறைமுகத்திற்குத் தன் மெய்காப்பாளருடன் வந்து சேர்ந்தான். வந்ததும் கப்பல் தலைவனைத் தன் சன்னிதானத்திற்கு வருமாறு அழைத்தான். கப்பலில் யாராவது அன்னியர் வந்திருக்கின்றனரா, என்னென்ன சாமான்கள் வந்திருக்கின்றன என்று அவனை பகதூரா கேட்டான்.

தற்சமயம் அன்னியர் யாரும் கப்பலில் கிடையாது எனவும், ஒருவன் வருவதாக இருந்து வரத் தவறி விட்டதாகவும், அவனுக்குச் சொந்தமான ஆளி இலைகளடங்கிய இருபத்தைந்து பானைகள் இருப்பதாகவும் அவன் கூறினான்.

ஆளி இலை என்றால் பகதூராவுக்குப் பிரியமாகையால் ஏராளமான பொருள் கொடுத்து அவ்வளவையும் கப்பல் தலைவனிடமிருந்து வாங்கி விட்டான். அந்தப் பணத்தை ஆளி இலையின் சொந்தக்காரரைச் சந்திக்கும் பொழுது அவனிடம் கொடுத்துவிடும்படி கட்டளையிட்டான்.

அன்று மாலை பகதூரா இபனி இளவரசியுடனும், அவளுடைய தோழிகளுடனும் தனியாயிருக்கையில் ஆளி இலைகளுள்ள பானைகளைக் கொணர்ந்து திறந்து பார்க்கும்படி உத்தரவிட்டான். ஆளி இலைகளுக்கடியில் தங்க சூரணம் ஏராளமாயிருந்தது கண்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர்.

எல்லாச் சட்டிகளையும் சோதித்துப் பார்க்கையில் ஒரு சட்டியில் தனது அருமைக் கவசம் இருந்தது கண்டு பகதூரா ஆனந்த மேலீட்டினால் மயக்கமுற்றான். தோழிகள் அவனுக்குச் சிகிச்சை செய்து மயக்கம் தெளிய வைத்தனர்.

சுயஞாபகம் வந்தவுடன் பகதூரா, தோழிப் பெண்களை வெளியே போகும்படி உத்தரவிட்டான். அவர்கள் போனவுடன் இபனி நாட்டு இளவரசியைத் தனியே அழைத்துச் சென்று பகதூரா, இந்தக் கவசம் இந்தச் சட்டியில் இருப்பதனால், இந்த ஆளி இலைக்குச் சொந்தக்காரன் தனது கணவனான கமரல்ஸமானாகத் தான் இருக்கவேண்டும் என்று கூறினான்.

இருவரும் இந்த நற்செய்தியைப் பற்றிச் சில விஷயங்கள் பேசிவிட்டு அடுத்தபடியாகச் செய்ய வேண்டியதைப் பற்றிப் பேசி முடிவு செய்தனர்.

கப்பல் தலைவனை உடனே வரவழைத்து ஆளி இலைகளின் சொந்தக்காரனை அன்னியனுடைய ஊருக்குத் திரும்பிச் சென்று அவனை உடனே அழைத்து வரும்படி பகதூரா கட்டளையிட்டான்.





அம்மா:—என்னடா செய்கிறாய் குழந்தாய்?

குழந்தை:—நான் தம்பிக்குக் கடிதாக எழுதுகிறேன்!

அம்மா:—கடிதாசா? உனக்குத் தான் எழுதவே தெரியாதே!

குழந்தை:-பரவாயில்லை, அம்மா! தம்பிக்குத்தான் படிக்கத் தெரியாதே!

சங்கடமான உத்தரவா யிருந்தாலும் அரச ஆக்ஞையை மீற முடியாததால் கப்பல் தலைவன் உடனே கமரல்ஸமான் இருக்கும் ஊருக்குச் சென்றான். தன்னுடைய மாலுமிகள் ஆறு பேருடன் கப்பல் தலைவன் ஒரு சிறு படகில் ஏறிக் கொண்டு நள்ளிரவில் கமரல்ஸமானின் ஊருக்கு வந்து சேர்ந்தான். அவனுடைய தோட்டத்திற்கு வந்ததால் கதவு தாளிட்டிருந்தது. வந்தவர்கள் கதவை பலமாகத் தட்டினார்கள். கமரல்ஸமான் கதவைத் திறந்தான். அவனைப் பார்த்ததும் மாலுமிகள் அவனைக் கட்டித் தூக்கிக்கொண்டு கப்பலுக்கு வந்து சேர்ந்தனர். திடீரென இவர்கள் பலாத்காரமாகத் தன்னை இழுத்துச் சென்றது கண்டு கமரல்ஸமான் கலங்கிப் போனான். ஆனால் இபனித் தீவுக்குத் தான் அழைத்துச் செல்லப்படுவதாக அறிந்ததும் கவலை நீங்கி ஆறுதல் அடைந்தான். இபனித் துறைமுகத்தை அடைந்தவுடன் கப்பல் தலைவன் கமரல்ஸமானை இபனி நாட்டு அரசனாக ஆண் வேஷத்திலிருந்த பகதூரா முன் நிறுத்தினான். அவன் தன் அருமைக் கணவன்தான் என்பதை அறிந்ததும் பகதூரா ஏராளமான வெகுமதிகளை அளித்துக் கப்பல் தலைவனை அனுப்பி விட்டாள்.

அந்நாட்டு மக்கள் கமரல்ஸமானை அறிந்துகொண்டு அவன் மீது அபிமானம் வைக்கும் வரையில் உண்மையைக் கூறுவது நல்லதன்று என்று தீர்மானித்து, சாதாரண உடையிலிருந்த கமரல்ஸமானுக்குப் பிரபுக்களுக்குரிய உடை அளிக்கச் செய்தான். அவனுக்கெனத் தனி அரண்மனை ஒழித்து விட்டான். பிறகு தனது நெருங்கிய ஆலோசகர்களில் ஒருவனாக அவனை நியமித்தான்.

கமரல்ஸமானுக்கு இபனி அரசன் தன் மனைவி பகதூரா தான் என்பது தெரியவில்லை. ஆகையால் அரசன், அன்னியனான தன்னிடம் இவ்வளவு அன்பு பாராட்டுவது கண்டு ஆச்சரியமடைந்தான்.

பகதூரா ஒரு நாள் கமரல்ஸமானைத் தனியாக அழைத்துத் தன்னிடமுள்ள கவசத்தைக் காட்டி "இதை எனக்கு ஒருவர் அனுப்பி வைத்தார். இதை எவ்விதமாகப் பிரயோஜனப் படுத்தலாம்?" என்று கேட்டான்.

அந்தக் கவசம் தான் இழந்து விட்டது தான் என்பதை அறிந்த கமரல்ஸமான் இபனி அரசனைப் பார்த்துக் கூறினான்:

"இதனால் எனக்கும் எனக்குத் தெரிந்த ஒரு அழகிய இளவரசிக்கும் கணக்கின்றித் தொந்தரவு ஏற்பட்டதைத்தான் நான் கண்டது. இந்தக் கவசத்தின் கதை மிகவும் சோகம் நிறைந்தது."

இபனி அரச வேஷத்திலிருந்த பகதூரா "அதுபற்றி எனக்கும் ஓரளவு தெரியும். நீங்கள் இந்த அறையிலே இருங்கள். நான் மறுபடியும் வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு வெளியே சென்றான்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் பகதூரா தன் சுய ரூபத்தில் திரும்பி வந்தாள். கமரல்ஸமானிடமிருந்து பிரிந்த தினத்தன்று அணிந்திருந்த உடைகளையே இப்பொழுதும் அணிந்திருந்தாள். மீண்டும் தன் மனைவியைக் கண்ட கமரல்ஸமான் பேச நா எழாமல் சந்தோஷத்தில் மெய் மறந்திருந்தான். சற்று நிதானம் ஏற்பட்டவுடன் ஒவ்வொருவரும் தன் கதையை மற்றவருக்குச் சொல்லி மகிழ்ந்தனர்.

மறுநாள் இபனி நாட்டரசனிடம் இருவரும் தங்கள் கதையைக் கூறினார்கள்.

பிறகு கமரல்ஸமானை இபனி நாட்டரசனாக முடி சூட்டுவதென்றும் இபனி நாட்டு இளவரசியை அவன் தனது இரண்டாவது மனைவியாகக் கொள்வதென்றும் முடிவு செய்யப்பட்டது.

கமரல்ஸமான் தனக்கு எதிர்பாராமல் கிடைத்த மாலை மரியாதைகளை மறந்து விட்டுத் தாய்நாட்டுக்கு அவசரமாகச் செல்லப் பிரியப் படவில்லை.

இபனி நாட்டில் மீண்டும் முடிசூட்டு விழா ஆடம்பரமாக நடந்தது. மீண்டும் திருமண வைபவம் பிரமாதமாக நடந்தது.

கமரல்ஸமான் தனது அழகிய இரு மனைவிகளுடன் நீண்ட காலம் ஆனந்தமாக வாழ்க்கை நடத்தினான். (முற்றும்)

---

சென்றவார விடுகதைக்கு
விடை: ஆவாரம்பூ

பாப்பா மலர்

# பலசாலி?



கிருஷ்ணமணி மிகவும் சோனிப் பயல். தனக்குப் பலம் இல்லாவிட்டாலும், பிறரது பலத்தைத் தனக்குச் சாதகமாக்கி விடுவான்.

அவனுக்கு மூன்று சிநேகிதர்கள் உண்டு. தேகப் பயிற்சி மேல் அவர்களுக்குச் சிரத்தை அதிகம். 'கர்லா', 'டம்பல்ஸ்', குஸ்தி போடுதல் முதலியவற்றைப் பயின்று வந்தார்கள். பாவம், கிருஷ்ணமணி வேடிக்கை பார்த்தானே தவிர அவனால் அந்தக் கருவிகளைத் தூக்கக்கூட முடியவில்லை.

ஒருநாள் கிருஷ்ணமணி கடையிலிருந்து புளி மூட்டை, பயறு மூட்டை, கயிறு இவைகளை ஒரு சிறு வண்டியில் வைத்துச் சிரமப்பட்டு இழுத்து வந்தான். வரும் வழியில் ஒரு பெரிய மேடு இருந்தது. அதன்மேல் எப்படி இழுத்து வருவது என்று திணறினான். வண்டியைப் பள்ளத்தில் நிறுத்தி வைத்து விட்டு மேட்டின்மேல் ஏறிப் பார்த்தான். அங்கே அவன் சிநேகிதர்கள் மூன்று பேரும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். மணிக்கு ஒரு யோசனை தோன்றிற்று. கீழே இறங்கித் தான் வைத்திருந்த கயிற்றின் ஒரு நுனியை வண்டியில் கட்டினான். மற்றொரு நுனியை எடுத்துக் கொண்டு மேட்டின் மேல் ஏறி, சிநேகிதர்களைப் பார்த்து, "டக்-அப்-வார் விளையாடலாம்! வாருங்கள். நீங்கள் மூவரும் ஒரு பக்கம் இருந்து இழுங்கள். நான் எதிர்ப் பக்கம் இழுக்கிறேன்!" என்றான்.

மூன்று பையன்களும் கொல் என்று சிரித்தார்கள். "சிரிப்பைக் கடைசியில் வைத்துக் கொள்ளுங்கள். உம், இழுங்கள்" என்றான் கிருஷ்ணமணி. பையன்கள் இழுத்தார்கள். மணி, தான் முழு பலத்துடன் எதிர்ப் பக்கம் இழுப்பதுபோல் நடித்தான். பையன்களுக்கு இழுப்பது கஷ்டமாகத்தான் இருந்தது. 'சோனிப் பயலிடம் தோற்றுவிடப் போகிறோமோ?' என்று பயந்து முழு பலத்துடன் இழுத்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாகக் கயிற்றை விட்டுக் கொண்டே இருந்தான், மணி. 'சபாஷ், பயல் நகர்கிறான்!' என்று நினைத்துக்கொண்டு அவர்கள் வேகமாக இழுத்தார்கள். இதற்குள் வண்டியை முக்கால்வாசி இழுத்து விட்டார்கள். கடைசியில் வண்டியே மேலே வந்து விட்டது. மூன்று பையன்களுக்கும் விஷயம் இப்பொழுதுதான் புரிந்தது. கிருஷ்ணமணி கொல் என்று சிரித்தான். பையன்கள் முகத்தில் அசடு வழிந்தது.






அப்பாடா! ஒருவாரமாகக் கண்களை இறுக மூடிக்கொண்டு வெளி உலகத்தையே பார்க்காமல் பேச்சுக் குரல்களை மாத்திரம் கேட்டுக் கேட்டுச் சலித்துப் போயிருந்த என் உள்ளத்தை, அந்தக் காலைக் கதிரவனின் பொன்னொளி, கண்கள் மூலமாகப் பாய்ந்து, பிரகாசிக்கச் செய்தது! என்னையறியாமலேயே ஒருவித இன்ப உணர்ச்சி என் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்தது. ஆம்! சில விநாடிகளுக்கு முன்தான், டாக்டர் ராம்தேவின் நர்ஸிங் ஹோமில், கண் ஆப்பரேஷனுக்காக 'அட்மிட்' செய்யப்பட்டிருந்த என்னுடைய கண்கட்டுகளை நர்ஸ் அவிழ்த்துவிட்டுப் போயிருந்தாள். பயந்துகொண்டேதான் கண்களைத் திறந்தேன். ஏதாவது கோளாறாக நேர்ந்திருந்தால் தேறுதல் கூற அம்மா கூடப் பக்கத்தில் இல்லை. பால் வாங்கி வரச் சென்றிருந்தாள். எதிர்த்தாற் போலிருந்த ஜன்னல், அதன் வழியாகத் தெரிந்த பவழ மல்லிகை மரங்கள் எல்லாம் தெளிவாகப் புலப்பட்டன. இந்தப் பார்வை மறுபடியும் வருமா என்று ஏங்கிக் கிடந்த எனக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை.

வெளி வராந்தாவில் யாரோ ஒரு பெண் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவளருகில் சுருட்டப்படாமலிருந்த ஒரு படுக்கையும் கிடந்தது. அதிலிருந்து அந்தப் பெண் அங்குதான் படுத்திருக்கிறாள் என்று ஊகித்துக் கொண்டேன். அந்தப் பெண் தன் தலையை ஜன்னல் பக்கமாகத் திருப்பினாள். அவளுக்கும் கண் சிகிச்சை நடந்திருக்கும் போலிருக்கிறது. ஆனால் அவள் கண்களில் போடப்பட்டிருந்த கட்டுக்கள் இன்னும் அவிழ்க்கப்படவில்லை! நடந்த நான்கைந்து நாட்களுக்குள்ளாகத் தான் அவள் அங்கு வந்திருக்க வேண்டும்! நர்ஸிங் ஹோமில் அறைகளுக்கு வாடகை கொடுத்துத் தங்க பண வசதி இல்லாத ஏழைகளுக்கு, டாக்டர் ராம்தேவ், வராந்தாவில் கட்டில் போட்டு இலவசமாகப் படுத்திருக்கும் சலுகையை அளித்திருந்தார். யாரோ பாவம்! ஏழைப் பெண்போலிருக்கிறது என கவனித்தேன்.

அவளுக்கும் என் வயதுதான் இருக்கும். நல்ல களை பொருந்திய முகம். ஆனால் அதில் விவரிக்க முடியாத ஒரு சோகக்களை பரவி இருந்தது. எழில் நிறைந்த முகமாக இருந்தாலும் அதில் ஏக்கம் பிரதிபலித்தது. ஆபரணங்கள் ஒன்றுமில்லாமலேயே அவள் அழகு பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவள் ஆடைகளில் ஆங்காங்கு காணப்பட்ட கிழிசல்கள் அவள் குடும்பத்தின் பொருளாதார நிலைமை மிகவும் சீர்குலைந்த நிலைமையில் இருப்பதாகவே தெரிவித்தன.

அவளுடன் பேச வேண்டுமென்ற ஆவல் அடக்க முடியாத வேகத்துடன் என் உள்ளத்தில் எழுந்தது. அவள்மேல் என்னையறியாமல் ஒரு பச்சாத்தாபம் எழுந்தது. மெதுவாகக் கட்டிலைப் பிடித்துக்கொண்டு எழுந்திருந்தேன். ஆனால் அதே சமயத்தில்

யாரோ ஒரு வயோதிகர், கையில் கூஜா வுடன், வாசல் கேட்டிலிருந்து அவளை நோக்கி வேகமாக வந்தார்.

அவருக்கு சுமார் ஐம்பது வயது இருக்க லாம். அதிகமான உழைப்பினால் உடல் நலிந்தவர்போல் காணப்பட்டார். வயோ திகம் அவரைச் சீக்கிரமே அண்டிவிட்டது போலிருந்தது. உழைப்பின் கடுமையினாலோ என்னவோ அவர் முகத்திலும் கடுமை நிலவி யிருந்தது. அவர் ஒன்றுமே பேசவில்லை. அந்தப் பெண்ணின் அருகில் வந்ததும் தான் வந்துவிட்டதைத் தெரிவிப்பதுபோல் கூஜாவை, 'டக்' என்ற சப்தத்துடன் அவளருகே கீழே வைத்தார். படுக்கையைத் தட்டிச் சுற்றிக் கட்டிலின் ஓரத்தில் வைத் தார். பிறகு கூஜாவைத் திறந்து, டம்ளரில் காப்பியை ஊற்றி, "இந்தா!" என்ற ஒரே வார்த்தையுடன் அவளிடம் கொடுத் தார். அவள் குடித்து முடித்ததும் கூஜாவை மூடிக்கொண்டு கிளம்பிப் போய்விட்டார். அவர் செய்கை எனக்கு விசித்திரமாகவே பட்டது. அவர் அவளுடைய தகப்பனா ராகத்தானிருக்க வேண்டும் என்று ஊகித் துக் கொண்டேன்.

எனக்கென்னவோ அந்தப் பெண்ணுடன் பேச வேண்டுமென்ற ஆவல் வினாடிக்கு வினாடி அதிகரித்தது. அம்மா தலை மறைந்த தும் மெதுவாக எழுந்திருந்து வெளி வராந்தாவிற்கு வந்தேன். வராந்தாவின் கோடியில் அந்தப் பெண் கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்திருந்தாள். நான் போய்க் கட்டி லின் மறு பக்கத்தில் உட்கார்ந்தேன். "யாரது? ஸிஸ்டரா?" என்று திடுக்கிட்ட வாறு கேட்டுக்கொண்டு அவள் எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தாள். "இல்லையம்மா! நான் நர்ஸ் இல்லை! உன்னைப்போல் கண் சிகிச்சைக்கு வந்த பெண்தான்! என் கட்டுக்களை இன்றுதான் அவிழ்த்தார்கள். நீ தனிமையில் இருப்பதைக் கண்டு சற்று பேசிக்கொண்டு இருக்கலாமென்று கிளம்பி னேன்! உன் தகப்பனாரா?... அவர் வந்து காப்பி கொடுத்துவிட்டுப் போகட்டுமே என்று சற்று தயங்கினேன். என் பெயர் சசீலா" என்றேன் மடமடவென்று. ஏதோ வெகு நாட்களாகப் பழகிய ஒரு தோழி யுடன் பேசுவதுபோல் பேசி விட்டே னென்று எனக்கே தோன்றியது.

அந்தப் பெண்ணின் முகம் திடீரென்று வெளுத்தது. அவள் உடம்பு நடுங்குவது போன்ற ஒரு பிரமை எனக்கு ஏற்பட்டது. "அம்மா சசீலா! அவர் என் தகப்பன ல்ல......கணவர்" என்றாள். அந்த வார்த்தைகள் வெகு சிரமத்தின் பேரில் தான் அவள் உதடுகளிலிருந்து வெளி வந்தன. அதில் எல்லையற்ற சோகம் ஒலித் தது. நான் இந்தக் கேள்வி மூலம் ஒரு மகத்தான குற்றம் செய்து விட்டேன் என்று தோன்றியது. ஆனால் நான் கன விலும் அந்த வயோதிகரை, அவள் கணவ ராக நினைத்திருக்க மாட்டேன். உண்மை தெரிந்துகூட அதை என் உள்ளம் நம்ப மறுத்தது. "அம்மா என்னை மன்னித்து விடு! அர்த்தமில்லாத பேச்சின் மூலம் உன்மனம் வருந்தச் செய்து விட்டேன் போலிருக்கிறது. நான் இன்னொரு சமயம் வந்து சாவகாசமாகப் பேசிக் கொண்டிருக் கிறேன். உன் பெயரை மாத்திரம் சொல் லம்மா" என்று கேட்டுக்கொண்டே எழுந் திருக்க முயற்சித்தேன்.

"சசீலா! உட்காரம்மா! என் மனத்தை நீ புதிதாக ஒன்றும் புண்படுத்தவில்லை! ஏற்கெனவே அது சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டதுதான்!......சிறிது நேரம் உன்னோடு பேசிக் கொண்டிருந்தாலாவது அது ஆறுதலைப் பெறும்; உட்காரு! என் பெயர் கமலா" என்றாள் அவள். நான் உட்கார்ந்தேன். பேச்சை வேறு திசையில் திருப்ப எண்ணி, 'என் கமலா! உன் கண்களில் என்ன கோளாறு! என்றைக்கு ஆப்பரேஷன் நடந்தது? என்றைக்குக் கட்டை அவிழ்ப்பார்கள்?" என்றேன்.

சில நிமிஷங்கள் கமலா மௌனமாக இருந்தாள். பிறகு அவள் தணிந்த குரலில் என்னிடம் சற்று நெருங்கி உட்கார்ந்து கொண்டு, "சசீலா! உன் முகத்தை நான் பார்த்ததில்லை. ஆனால் என் அகக் கண்க ளால் உன் அன்பு நிறைந்த இதயத்தைக் காண் கிறேன். டாக்டரிடம் கூடச் சொல்லாத விஷயங்களை உன்னிடம் சொல்லப் போகி றேன். அப்போதுதான் என் உள்ளக் கொந் தளிப்பு அடங்கும்! நானும் என்னென் னவோ கற்பனைக் கோட்டைகள் கட்டி னேன்! வறுமையில் பிறந்ததினால், வாலிபக் கணவன் கிடைக்காமலா போய்விடுவான் என்று இறுமாப்புக் கூடக் கொண்டிருந் தேன்! என் கனவு நனவாகும் போலக் கூடத் தோன்றியது! ஆனால் கடைசி வினாடியில் என் கற்பனைக் கோட்டைகள் சிதறின. அத்துடன் என் இதயமும் உடைந் தது......" நான் குறுக்கிட்டேன். "கமலா! எல்லாவற்றையும் ஆரம்பத்திலிருந்து சொல் லேன்" என்றேன். 'சரி' என்பதற் கடை

மௌனமாகத் தலையை ஆட்டிவிட்டு, அவன் மேலும் தன் கதையைத் தொடர்ந்தான்:

## 2

உத்தியோகத்திலிருந்து ஓய்வெடுத்துக் கொள்ளும் நிலையிலிருந்த ஒரு சாதாரண எலிமெண்டரி ஸ்கூல் உபாத்தியாயருக்கு ஏழு குழந்தைகளில் மூத்தவளாகப் பிறந்திருந்த எனக்கு வறுமையின் கொடுமையும் ஏழ்மையின் கஷ்டங்களும் புதிதல்ல. என் தகப்பனார் எனக்கு ஆபரணங்களையும் ஆடைகளையும் வாங்கித் தராத போதிலும் அறிவுச் சுடரை மாத்திரம் நன்றாகக் கொளுத்தி விட்டிருந்தார். பள்ளிக்கூடத்தின் படி ஏறாமலேயே பத்தாவது வகுப்பு வரை உண்டான பாடங்களைக் கற்பித்திருந்தார், அப்பா. குறிப்பாக நான் ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தேன்.

பெண் என்று பிறந்த உடனேயே பெற்றோர்களுக்குக் கல்யாணக் கவலையும் வந்துவிடுகிறது. என் தகப்பனார் அந்தக் கவலையை எல்லாம் கட்டி வைத்து விட்டார். "கமலாவின் அழகிற்கும், படிப்பிற்கும் அவளை எவனும் கொத்திக் கொண்டு போய்விட மாட்டானா?" என்பார்.

எங்கள் ஊர் ஓர் அசல் பட்டிக்காடு. அதில் சற்று மனச்சாந்தி அளிப்பது ஆற்றங்கரைதான். தினந்தோறும் மாலையில் நான் ஆற்றங்கரைக்குப் போய் அழுக்குத் துணிகளுக்கு 'சோப்' போட்டுக் கொண்டு, குடத்தில் ஜலத்தையும் மொண்டு வருவேன்.

ஒருநாள் மாலையில் நான் சாவகாசமாக சோப்புப் போட்டுக் கொண்டிருந்தேன். ஆற்றங்கரையில் கூப்பிடு தூரத்திற்குச் சுற்றிலும் யாருமில்லை. அந்த மோன நிலையில் லயித்தவாறு இருந்த என்னை, திடீரென்று சமீபத்தில் எழுந்த பேச்சொலி கவர்ந்தது. திரும்பிப் பார்த்தேன். பின் பக்கமுள்ள படித்துறைக் கல்லில் இரண்டு வாலிபர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பார்வை என்மேல் இருந்தது. எனக்கு ஆங்கிலம் தெரியாதென்ற நம்பிக்கையில் அவர்கள் சரமாரியாக என்னைப் பற்றியே ஆங்கிலத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"இந்தப் பட்டிக்காட்டுப் பூச்சி யாரடா?" என்றான் சிவப்பாகவும் உயரமாகவும் இருந்த வாலிபன். வெள்ளை வெளேரென்ற ஜிப்பாவும், சுருண்டு சுருண்டிருந்த அவன் கிராப்பும் வெகு கவர்ச்சிகரமாக இருந்தன. பேச்சிலும் ஒரு இனிமை தொனித்தது. கூட வந்தவன் தணிந்த குரலில் "பட்டணத்திலில்லாத பட்டுப் பூச்சியா?......இது சாதாரண கிராமாந்திர வண்ணாத்திப் பூச்சி என்று வைத்துக் கொள்ளேன்!" என்றான். இந்த இரண்டாவது நபர், உள்ளூர் பட்டாமணியத்தின் மைத்துனன் ஹரிஹரன். அவன் பட்டணத்தில் இன்ஜினியரிங் கல்லூரியில் படித்து வந்தான். அவன் எப்போதாவது விடுமுறை நாட்களில் வருவதுவழக்கம். கூட வந்திருப்பவன் அவன் கல்லூரி நண்பனாக இருக்கலாம் என்று யூகித்துக்கொண்டேன்.

ஹரிஹரனின் நண்பன் சில விநாடிகள் பேசாமலிருந்தான். "பிரமாதம் அப்பா! ஆடம்பரமில்லாத இயற்கை அழகு அப்படியே உருவாகியிருக்கிறதப்பா! பட்டணத்து 'மேக் அப்'பெல்லாம் இவளுடைய ஒரிஜினல் அழகிற்கு உறை போடக் கூட இயலாது!" என்றான். என் காது கேட்க என் வனப்பைப் புகழ்ந்து பேச நான் கேட்டதில்லை. ஆனந்தத்தில் அந்தக் கல்லூரி மாணவனுக்கு நன்றி செலுத்த வேண்டுமென்ற ஆவல் வெகுவாக என் உள்ளத்தில் ஏற்பட்டது. அதைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டேன்.

துணிகளை அலசிப் பிழிந்து விட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஹரிஹரன் சுமார் நூறு கஜம் தள்ளிப் போய் யாரோ பண்ணை ஆட்களுடன் பேசிக் கொண்டிருந்தான். இப்



"குழந்தை, இப்பொழுது உனக்கு வயசு என்ன?"

"பதினொன்று, மாமா!"

"போன வருஷம் ஐந்து வயது என்று சொன்னாயே, அப்படியானால் இப்பொழுது உனக்கு ஆறு வயது தானே?"

"எப்படி? போன வருஷம் ஐந்து. இப்பொழுது ஆறு— இரண்டையும் கூட்டுங்கள். ஆறும் ஐந்தும் பதினொன்று இல்லையா?"

போது, மறுபடியும், அந்தப் புது மாணவனிடம், இரண்டு வார்த்தைகள் நன்றியறிதல் சொல்லவேண்டும் போலிருந்தது. தெரிந்த நபரான ஹரிஹரன் இல்லாத போதே பேசி விடவேண்டும் என்ற ஆவலில் துணிகளைப் பிழிந்து எடுத்துக் கொண்டு கிளம்பினேன். படித்துறையில் அந்த மாணவன் மாத்திரம்தான் இருந்தான். ஆனால் படித்துறையை நெருங்க நெருங்க எனக்குப் பதட்டமும் நடுக்கமும் ஏற்பட்டது. ஆனால் பட்டணத்துக்காரர்களுக்கே துணிச்சல் அதிகம் போலிருக்கிறது! என்னையே விழுங்கி விடுவது போல் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பார்வை எனக்கும் துணிச்சலைக் கொடுத்தது. "தங்கள் புகழ்ச்சி மொழிகளுக்கு என் மனமார்ந்த நன்றி! இயற்கை அபிமானியான தாங்கள் ஆங்கில கவிஞர் வோர்ட்ஸ் வொர்த்தின் பக்தர் போலும்!" என்று ஆங்கிலத்தில் கணீரென்று சொல்லிவிட்டு விடுவிடென்று நகர்ந்து விட்டேன். பேசி முடித்த பிறகு தான் என் உடம்பில் அதிக நடுக்கம் ஏற்பட்டது. அந்த மாணவனோ பிரமிப்பினால் சிலை போல் நின்று விட்டான்.

அப்புறம் விஸ்தரிப்பானேன்! நான் முதல் சந்திப்பிலேயே தான் என் மனதை அவன்பால் பறி கொடுத்து விட்டேன்.

அவர்-இனிமேல் அவனென்று சொல்லலாமா!—பெயர் பாலகோபால்! ஹரிஹரனுடன் இன்ஜினியரிங் கல்லூரியில் கடைசி வருஷம் பரீட்சை எழுதியிருந்தார். அவருக்கு முறைப் பெண்—அத்தை பெண் கலாசாலையில் வாசித்துக் கொண்டிருந்தாளாம். ஆனால் அவர்களுக்கும், இவருக்கும் மனஸ்தாபமாம்! ஆகையால் அத்தையின் பெண்ணை மணப்பது என்பது இந்த ஜன்மத்தில் இல்லையாம். திருமண விஷயத்தில் இவர் தகப்பனார் இவர் இஷ்டத்திற்கு விரோதமாகப் போகமாட்டார். எப்படியும் இந்த லீவிற்குள் தன் அப்பாவின் அநுமதியுடன் என்னை விவாகம் செய்து கொண்டு விடுவதாகக் கூறினார்! அவர் பேச்சு என்னை சுவர்க்கத்திற்கே கொண்டு போய்விட்டது.

பாலகோபாலன் மிகவும் நேர்மையானவர். எத்தனையோ தடவை சந்தித்தோம். ஆனால் அவர் என் கரங்களைக் கூட ஸ்பர்சித்ததில்லை. திடீரென்று ஒரு நாள் "கமலா! நான் இன்று ஊருக்குப் போகப் போகிறேன். வெளி நாடு போகும் 'ஸ்காலர்ஷிப்' விஷயமாக யாரையோ பார்க்க வேண்டும் என்று அப்பா எழுதியிருக்கிறார். நான் போய்விட்டுப் பதினைந்து நாட்களில் வருகிறேன். இந்தப் புகைப் படத்தை மாத்திரம் வைத்துக்கொள் என் நினைவாக!" என்றார். நான் திடுக்கிட்டேன்.

"ஊருக்கா?......அவசியம் போக வேண்டுமா?" என்றேன் தயங்கியவாறு. எனக்கு உலகமே சூன்யமானது போலிருந்தது. கடந்த ஒரு மாதம் போனதே தெரியவில்லை. இனி ஒரு கணம் போவதுகூடக் கடினமாகத் தோன்றியது!

"அவசியம் பதினைந்து நாட்களில் கல்யாண ஏற்பாடுகளுடன் வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். ஆனால் அதுதான் கடைசி சந்திப்பாகப் போய் விட்டது. என் ஆசைக் கோட்டைகள் அஸ்திவாரத்திலிருந்தே ஆடி விட்டன. என் திட்டமெல்லாம் தரைமட்டமாகி விட்டது. பதினைந்து நாட்கள் கழித்து வந்த கடிதத்தில் அவர் "கமலா! என்னை மறந்துவிடு! என் ஆசை வார்த்தைகள் நீரில் எழுதியதைப் போலாகி விட்டன. எனக்கு அயல் நாடு போகும் ஸ்காலர்ஷிப் கிடைக்கவில்லை. ஆனால் என் பணக்கார அத்தையின் புருஷர் தம் மனஸ்தாபங்களை யெல்லாம் விட்டு விட்டு என்னை அமெரிக்காவிற்கு அனுப்ப சம்மதித்திருக்



"ஏன் ஸார், லீலாவும் ராஜுவும் காதல் கட்டங்களில் வெகு உணர்ச்சியுடன் நடித்துக் கொண்டிருந்தார்களே' இப்போது ஏன் அப்படி நடிப்பதில்லை?"

"ஓ. அதுவா? இப்போது அவர்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டது!"

கிறார். அவர் அன்பிற்கு ஈடு செய்ய அவர் பெண்ணை நான் மணந்து கொள்ளப் போகிறேன். என்னை மறந்துவிடு! ஆனால் உன்னை நான் முதன் முதலில் சந்தித்த தினத்தை ஒருநாளும் மறக்க மாட்டேன்" என்று எழுதியிருந்தார். போட்டோவை எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்து விட்டுக் கடிதத்தைக் கிழித்து எறிந்தேன். வாழ்க்கையில் எனக்கிருந்த ஆசையே போய்விட்டது. நடைப் பிணமானேன்!

ஊரிலே என்னைப் பற்றி வதந்திகள் உண்மைக்குப் புறம்பாகவே கிளம்பின. என் பெற்றோர்கள் அவமானத்தால் நடுங்கினர். எப்படியாவது என்னை யாருக்காவது கல்யாணம் பண்ணிக் கொடுத்துவிடத் தீர்மானித்தார்கள். கடைசியில் ஐம்பது வயது வாலிபர் ஒருவர்தான் மூன்றாம் தாரமாக என்னை மணக்க முன் வந்தார். நான் மறுப்பே சொல்லவில்லை. என் வாழ்க்கை தான் முன்பே தீய்ந்து விட்டதே!

கல்யாணமான மறுநாள் என் கணவருடன் அவர் ஊருக்குப் புறப்பட்டு விட்டேன்.

ஏதோ வாழ்க்கைச் சக்கரம் ஓடிக் கொண்டிருந்தது. சில தினங்களுக்கு முன் ஜன்னல் வழியாக வாசல்புறம் பார்த்துக் கொண்டிருந்தேன். பாலகோபாலன்போல் யாரோ போய்க் கொண்டிருந்தது தெரிந்தது. எனக்குப் பழைய நினைவுகள் பீறிட்டு எழுந்தன. உடனே பெட்டியைத் திறந்து பத்திரப்படுத்தி வைத்திருந்த பாலகோபாலனின் புகைப்படத்தைக் கையில் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

எவ்வளவு நேரம் அதைப் பார்த்துக் கொண்டிருந்தேனோ தெரியாது. ஆனால் திடீரென்று பின்னால் ஏற்பட்ட அரவம் கேட்டுத் திடுக்கிட்டேன்! "சண்டாளி! துரோகி, இது யாரடி உன் கள்ளக்காதலன்?" என்று கேட்டுக் கொண்டே என் கணவர் அந்தப் படத்தைப் பிடுங்கிச் சுக்கல் சுக்கலாக கிழித்தார். இரண்டு முஷ்டிகளையும் மடக்கிக்கொண்டு என் கண்களில் குத்திவிட்டார் "ஐயோ!" என்று அலறி விழுந்தேன். கண்களை விழிக்க முயன்றேன். முடியவில்லை! பார்வை போய்விட்டது.

வெகு நேரம் கழித்துத் திரும்பி வந்த அவருக்கு வெறி அடங்கியிருந்தது. மறு நாள் காலையில் இங்கே கூட்டி வந்து எனக்கு வைத்தியம் செய்ய ஏற்பாடு செய்தார்.

அதற்கப்புறம் அவர் என்னிடம் பேசவே இல்லை! நாளைக் காலை கட்டை அவிழ்த்து விடப் போகிறார்கள். கண்கள் சரியாகி விட்டன என்று நேற்றே டாக்டர் சொல்லி விட்டார்! இனிமேல்தான் எனக்குக் கடும் சோதனை காத்திருக்கிறது! அவர் எப்படி என்னை நடத்துவாரோ தெரியாது! மேற்கண்ட வார்த்தைகளைச் சொல்லும் போது அவள் குரல் தழதழத்தது.

"கமலா! தைரியமாக இரு! உன் கணவர் உன்பேரில் இனிமேலும் அன்பாகத்தான் இருப்பார்! நான் மறுபடியும் உன்னைச் சாயங்காலம் சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.

## 3

"என்னடி சசிலா! பிடிவாதம் பிடிக்கிறாய்? இன்றுதானே கட்டை அவிழ்த்திருக்கிறார்கள்? இன்றைக்கே புறப்பட வேண்டுமா? நாளைக்குக் காலையில்தான் உன் புருஷன் வந்து கூட்டிப் போவதாக எழுதியிருக்கிறானே. ஒரு நாள் பொறுக்க மாட்டாயா?" என்றாள் அம்மா.

"முடியவே முடியாது. தேவையான மருந்துகளை இப்போதே வாங்கிக் கொள். அவருக்கு 'வரவேண்டாம்' என்று ஒரு தந்தி கொடுத்து விடு. இன்று மாலை எப்படியும் புறப்பட்டாக வேண்டும்" என்றேன்.

"நல்ல பெண்ணடி நீ!" என்று அலுத்துக் கொண்டே அம்மா சாமான்களை ஒழுங்கு படுத்த ஆரம்பித்தாள்.

இவ்வளவு அவசரமாக ஆஸ்பத்திரியை விட்டு ஊருக்குப் போகவேண்டும் என்பதின் காரணம் எனக்கல்லவா தெரியும்! பாலகோபாலன் வேறு யாருமில்லை, என் கணவர்தான்! பேதைப் பெண் கமலா, நாளைக் காலையில் கட்டு அவிழ்க்கப்பட்டு, கண்களை விழித்ததும் அவரைப் பார்த்து வைக்கக் கூடாதே என்ற கவலையில்தான் ஊருக்குக் கிளம்பத் தீர்மானித்தேன்!

### திருத்தம்

ஜூன் 24 ந் "கல்கி" இதழில் வெளியான திருமணச் செய்தியில் மணமகள் ஸ்ரீமதி இந்திரா தேவி கள்ளர் சமூகத்தில் முதன் முதலாக இண்டர் பரீட்சை தேறியவர் என்று குறிப்பிட்டிருந்தது. அந்த விவரம் தவறு என்றும், திருச்சி-தஞ்சை ஜில்லாக்களில் பி. ஏ. ஆனர்ஸ், எம். பி. பி. எஸ். முதலிய பெரிய பரீட்சைகளில் தேறிய கள்ளர் சமூகத்துப் பெண்மணிகள் உளர் என்றும் அறிந்து மிகவும் மகிழ்கிறோம். —ஆசிரியர்

# அவள் தெய்வம்

அக்ஷயம்

எப்பாடு பட்டாவது ஜானகியைக் காப்பாற்றியே தீர வேண்டும். அவள் என்னை இந்த உலகத்தில் தன்னந் தனியனாக விட்டு விட்டுப் போய் விட்டால், அன்பு என்பதை அறியாதவனாகவே செய்து விட்டுப் போய் விட்டால், அப்புறம் இந்த வாழ்க்கையில் எனக்கு என்ன ரசம் இருக்கும்! அப்புறம் நான் நாதியற்றவனாக, கதியற்றவனாக ஆக வேண்டியதுதானே! அப்புறம் என்னைச் சீந்துவார் யாருமே இருக்க மாட்டார்கள். எனக்கு இந்த உலகமே வெறிச்சென்று ஆகி விடும். ஆகவே, அவளை எப்படியாவது காப்பாற்றியே ஆகவேண்டும்.

இதுவரை அவள் எனக்காக, என் முகத்துக்காக உலகத்தின் கஷ்டங்கள் அனைத்தையும் பொறுத்து வந்திருக்கிறாள். ஏழ்மையில் வாடி உணர்ச்சி மடிந்து நம்பிக்கை இழந்து போன என்னைச் சுற்றி, எங்கு பார்த்தாலும் ஒரே காடாந்தகாரம் சூழ்ந்திருக்கும் இந்த நிலையில் கூட என்னெதிரே இனிமையாக இளநகை யாடிக்கொண்டு அவள் வருவாளாகில் என் உள்ளத்திலே நம்பிக்கை ஒளி பிறந்து விடும். ஜானகி தன் அன்பு, உழைப்பு, முயற்சி, இனிய சுபாவம் இவற்றின் உதவியைக் கொண்டு எல்லாம் மரித்த என் உடலுக்குப் புத்துயிர் அளிக்கும் சஞ்சீவனி மருந்தை ஊட்டி வந்தாள். உண்மையில் அவள் மட்டும் இல்லாமலிருந்தால் நான் வாழ்க்கையை வெறுத்து எப்பொழுதோ தற்கொலை செய்து கொண்டிருப்பேன்.

இவ்வளவு நாட்கள் வாழ்க்கையில் இடியுண்ட பிறகு நம்பிக்கைக் கதிர் ஒன்று என் கண்களுக் கெதிரே புலனாகி யிருக்கிறது. ஆனால் விதியின் விளையாட்டை என்னவென்று சொல்வது! என் துன்ப நாட்களில் எவள் தன் இருதயத்தையே எனக்கு மலர்ப்படுக்கையாக விரித்திருந்தாளோ, அவள் தலையில் எனக்கு இன்பம் கிட்டும் இந்த வேளையில் என்னைப் பார்த்து ஒரு தடவையாவது மகிழ்ச்சியுடன் புன்னகை புரிய வேண்டும் என்று எழுதாமல் விட்டு விட்டாயே, சர்வேசா! அவள் துயரத்தால் வாடி என்னையும் துயரத்தில் ஆழ்த்தி விட்டு என்னைப் பிரிந்து சென்று விடுவாளோ! நான் என் மட்டற்ற மகிழ்ச்சியை மறந்து இருதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு இந்த அவலக் காட்சிகளை யெல்லாம் காண வேண்டுமா! முடியாது, முடியாது; என்னால் முடியாது.

ஆனால் என்ன செய்வேன்! ஜானகியைக் காப்பாற்ற வேண்டும் என்றால் ஒரு நல்ல டாக்டரை அழைத்துக் காட்ட வேண்டும். நல்ல டாக்டரை அழைக்க வேண்டும் என்றால் அதற்குப் பணம் வேண்டும். பணத்துக்கு நான் எங்கே போவேன்! அன்றாடச் செலவுக்கு இரண்டு மூன்று என்று வாங்கியதில் ஏகப்பட்ட கடன் ஏறிக் கிடக்கிறது. எனது என்றிருக்கும் ஆஸ்தி அத்தனையையும் விற்றாலும்கூட இப்பொழுது இருக்கும் கடனையே தீர்க்க முடியாதே! மனைவிக்கு மருந்து இல்லை. சின்னப் பிள்ளைக்குச் சோறு இல்லை. இந்த உலகில் பணமின்றி வாழ்வது மரணத்தைக் காட்டிலும் அதிகத் துன்பம் கொடுக்கக் கூடியதாக அல்லவா இருக்கிறது! ஏழை என் மீது இரங்குபவர்களும் இல்லை. நம்பி நாலு காசு கடன் கொடுப்பாரும் இல்லை. பிச்சைக்காரனைப் போலப் பகல் முழுவதும் சுற்றித் திரிகிறேன். ஆனால் என்னை ஏன் என்று கேட்பார்தான் யாரும் கிடையாது.

ஜுர வேகத்தில் ஜானகி தன் நினைவு இழந்து கிடக்கிறாள். மருந்து வாங்கிக் கொடுக்க முடியாமையினால் அவள் நிலைமை வர வர மோசமாகிக் கொண்டிருக்கிறது. இந்தக் கடுங்குளிரில் அவளுக்குப் போர்த்த ஒரு நல்ல துணி என்னிடம் கிடையாது. மூர்ச்சையுற்றுக் கிடப்பதனால் அவளுடைய பற்கள் கிட்டித்துப் போய் விட்டன. புருஷன் என்று இருந்து கொண்டு மனைவியின் இந்தச் சகிக்க முடியாத கஷ்டத்தை நான் எப்படிச் சகிப்பேன்! எனக்கு இருதயமே வெடித்து விடும்போலிருக்கிறது. இனிப் பொறுக்க முடியாது இந்தத் துயரம்.

சட்டைப் பையில் கைவிட்டுத் துழாவிப் பார்த்தேன். நான்கு ஐந்து அணாச் சில்லறையும் வேலைக்கு மனுப் போட்ட ஓரிடத்திலிருந்து வந்த பதிலும் இருந்தது. கடிதத்தை எடுத்து ஒரு முறை படித்தேன். எத்தனையோ கஷ்டங்களுக்கும் அவநம்பிக்கைகளுக்கும் பிறகு அனந்தப்பூரில் உள்ள ஒரு காரியாலயத்திலிருந்து என் மனு ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதாகக் கடிதம் வந்திருந்தது. இரண்டு வாரத்துக்குள் அனந்தப்பூர் வந்து வேலையை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று அந்தக் காரியாலயத்து அதிகாரி எழுதியிருந்தார்.

இந்தக் கடிதத்தினால் என்னைக் காட்டிலும் பன் மடங்கு ஆனந்தம் அடையக்கூடியவள் ஜானகி. ஆனால் அந்தோ! அவள்தான் இவ்வுலகத்திலிருந்து விடுதலை பெற்றுச் சிறகடித்துக் கொண்டு பறந்து போகக் காத்திருக்கிறாளே! இவ்வளவு நாட்களாக நான் விரும்பி வேண்டிக் கொண்டிருந்த பொருள் இன்று கிடைத்து விட்டது. ஆனால் எவளுக்காக நான் இவ்வளவையும் விரும்பினேனோ, அவளே என்னை விட்டுப் பிரிந்து செல்லத் துணிந்து விட்டால், அப்புறம் நான் யாருக்காக உத்தியோகம் பார்க்க வேண்டும்! எதற்காகப் பார்க்க வேண்டும்!

நான் மெதுவாக அவளுடைய தலைமாட்டில் போய் நின்றேன். குழி விழுந்து போன அவளுடைய கண்கள் மூடியிருந்தன. உடல் வெடவெட வென்று நடுங்கிக் கொண்டிருந்தது. புகையேறிப் போன விளக்கின் வெளிச்சம் அவள் முகத்தில் விழுந்து நோயினால் மெலிந்திருந்த அவளுடைய முகத்தை இன்னும் கோரமாக்கிக் காட்டிக் கொண்டிருந்தது. அவளுடைய நெற்றியில் கையைவைத்துப் பார்த்தேன். நெருப்பாகச் சுட்டது. என் இருதயம் 'படபட' வென்று அடித்துக் கொண்டது.

என்ன செய்வேன்! அவள் வாழ்க்கை வர வர அடங்கிக்கொண்டே யிருக்கிறதே! எப்படி நான் அவளைக் காப்பாற்றுவேன்!

நான் அப்படியே உட்கார்ந்து தலையைப் பிடித்துக்கொண்டு யோசிக்கலானேன். அந்த யோசனைக்கு ஒரு முடிவே ஏற்படவில்லை. என்ன வெல்லாமோ பயங்கர எண்ணங்கள் எழுந்து என் மூளையைக் குழப்பின. என் சிந்தனைக் கடலுக்கு ஒரு கரை தட்டுப் படாமற் போகவே, என் இருதயம் அம்பு தைத்த மானைப்போலத் துடித்து அடங்கி ஜடமாகி விட்டது. அப்பொழுது யாரோ மெதுவாக என் காதினருகில் வந்து, "திருடு!" என்று ஓதிச் சென்றனர்.

திருடுவதா! ஆம், திருடத்தான் வேண்டும். இதை விட்டால் வேறு வழியில்லை. பணத்தாசை பிடித்து உலகத்தில் எத்தனை எத்தனையோ பேர் பெரிய பெரிய பாவச் செயல்களில் இறங்கவில்லையா! பணத்துக்காகக் கொலைகள் முதற்கொண்டு செய்திருக்கிறார்களே! அப்படி யிருக்கும்பொழுது, நன்னடத்தையே உருவான பெண்ணின்—அதுவும் என் உயிருக்கு உயிரான மனைவியின் உயிரைக் காப்பாற்றுவதற்காக, ஒரே ஒரு நாளைக்கு மட்டும் நான் களவாடச் சென்றால், அது ஒரு பெரிய குற்றமாகி விடுமா!

யோசிக்க யோசிக்க அதைவிட லகுவான வேறு உபாயம் இருப்பதாகவே தோன்றவில்லை. யாருக்கும் தெரியாது; யாரும் பார்க்க மாட்டார்கள். கேட்க மாட்டார்கள். இதுதான் சரியான உபாயம். திருடியாவது நாம் ஜானகியின் உயிரைக் காப்பாற்றித்தான் தீரவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

இந்த யோசனையில் நள்ளிரவு கழிந்துவிட்டது. குளிர் தாங்காமல் ஜனங்கள் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு ஆனந்தமாக நித்திரை புரியும் நேரம். ஜன நடமாட்டம் குறைந்து ஓசை ஒய்ந்து ஊர் அடங்கிக் கிடக்கும் நேரம். நான் மெதுவாகக் கதவைத் திறந்து வெளியே எட்டிப் பார்த்தேன். நாற்புறமும் நல்ல அமைதி நிலவியிருந்தது. கார்ப்பரேஷன் விளக்குகளினால் கடும் பனியை நன்கு அகற்ற முடியவில்லை. ஆகவே அவை மிகவும் மங்கலாகத் தெரிந்துகொண்டிருந்தன. மங்கலாக எரிந்து கொண்டிருந்த பொழுதிலும் அவை கண் கொட்டாமல் நகரத்தின் நடவடிக்கைகளைக் கண்காணித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

நான் பித்தனைப் போல வீட்டை விட்டு வெளியேறினேன். என் மாதிரி நம்பிக்கை இழந்து வகை தெரியாமல்தான் மக்கள் இப்படித் திருட்டுத் தொழிலில் இறங்குகிறார்களோ!

அந்த இருட்டுத் தெருவில் அயலார் வீட்டுச் சுவரில் ஏறி நிற்கும் பொழுது என் மார்பு 'பட பட' வென்று அடித்துக் கொண்டது. 'எங்கேயாவது நாம் பிடிபட்டு விட்டால்......! ஏழையாக இருந்த பொழுதிலும் எல்லோரும் நம்மை நாணயஸ்தன், நல்லவன் என்று நம்புகிறார்களே! கையும் களவுமாகப் பிடிக்கப்பட்டால் நம் நிலைமை என்ன ஆகும்!' என்ற கவலை என்னை ஆட்கொண்டது.

தூரத்தில் தெரு முனையில் ரோந்துக்காரன், 'தூங்காதே!' என்று கூவுவது என் காதுகளில் விழுந்தது. நான் அப்படியே சுவரில் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டேன். பயத்தினால் நரம்பில் ஓடும் ரத்தம் உறைந்து விட்டது போன்ற பிரமை உண்டாயிற்று.

இம்மாதிரி நிலையில் நான் எத்தனை நேரம் உட்கார்ந்திருந்தேனோ, எனக்கே தெரியாது. எந்தக் காரியத்தைச் செய்வதற்காக வீட்டை விட்டுப் பித்தனைப் போல வெளியேறி வந்தேனோ, அந்தக் காரியத்தைச் செய்ய என்னால் முடியவில்லை. நூற்றுக்கணக்கான மனிதர்கள் மறைந்து கொண்டு என்னையே பார்த்துக் கொண்டிருப்பது போலவும், எல்லோரும் ஏக காலத்தில் 'திருடன், திருடன்' என்று கூச்சலிடத் தயாராயிருப்பது போலவும் அஞ்சி நான் திருட்டு விழி விழித்தேன்.

அடுத்த நிமிஷம் நான் சுவரிலிருந்து கீழே குதித்து விட்டேன். கீழே குதித்ததுதான் தாமதம்; நோயினால் வெளிறிப் போயிருந்த ஜானகியின் முகம் என் கண்களெதிரே மின்னலைப் போலத் தோன்றி மறைந்தது. வாடி வதங்கி வெளுத்துப் போன அந்த முகத்தைப் பார்த்து என் இருதயமே வெடித்து விடும் போலாகிவிட்டது. அவள் முகத்தைச் சுற்றி மரணத்தின் கரிய நிழல் படர்ந்திருந்தது. அவள் சுடுகாட்டில் கிடப்பது போலவும் அவளைச் சுற்றிப் பல சிதைகள் எரிந்து கொண்டிருப்பது போலவும் கற்பனைக் கனவு கண்டேன். இனித் தாமதிக்கக் கூடாது. மருந்து இல்லையேல் நம் வீடு சுடுகாடாக மாற வேண்டியதுதான்!

இதை நினைத்த மாத்திரத்திலேயே என் பயம் என்னைவிட்டு அகன்றது. நான் உயிரையும் லட்சியம் செய்யாமல் ஒன்றையும் பொருட்படுத்தாமல் சுவரேறிக் குதித்து விட்டேன்.

★

அந்த அறை நிச்சப்தமாக இருந்தது. நல்ல மை யிருட்டு. கண்களுக்கு ஒன்றும் புலனாகவில்லை. பையிலிருந்து தீப் பெட்டியை எடுத்து ஒரு தீக்குச்சியைக் கிழித்தேன். நான் நின்று கொண்டிருந்த அறை பலகைகளால் இரண்டாகத் தடுக்கப்பட்டிருந்தது. நடுவிலே ஒரு திரை தொங்கிக் கொண்டிருந்தது. அந்த வழியாகத்தான் ஒருவேளை அடுத்த அறைக்குப் போகவேண்டுமோ, என்னவோ!

சுவரை ஒட்டினாற் போல இரண்டு அலமாரிகள் இருந்தன. நடுவில் டிராயர் உள்ள மேஜை ஒன்று இருந்தது. மூலையில் பெண்கள் அணியும் துணிகள் சில தொங்கிக் கொண்டிருந்தன. மேஜைமீது ஒரு பெரிய கண்ணாடி இருந்தது. அதற்கு அருகிலேயே மேல் நாட்டு ரப்பர் சீப்பு, பிருஷ், ஸோப், தைலப் பாட்டில்கள், பவுடர்கள் முதலிய நவ நாகரிக சாமான்கள் அழகாகப் பரப்பி வைத்திருந்தன. இதையெல்லாம் பார்த்த நான், இது ஒரு பெண்ணின் அலங்கார அறையாக இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டேன். இவ்வளவு அலங்கார சாமான்கள் வைத்திருக்கும் பெண் கட்டாயம் பணக்காரியாகத்தானே இருக்க வேண்டும்!

மேஜையின் ஒவ்வொரு டிராயரையும் இழுத்துப் பார்த்தேன். எல்லாம் மூடியிருந்தன. இரண்டு அலமாரிகளும் கூடப் பூட்டியிருந்தன

நம்பிக்கையிழந்த நான், இவ்வளவு தூரம் வந்தும் கடைசியில் வெறுங் கையுடன்தான் திரும்பிப் போக வேண்டியிருக்குமோ என்று எண்ணினேன். இருந்தாலும் இன்னொரு தீக்குச்சியைக் கிழித்து இங்கும் அங்கும் பார்த்தேன். அலமாரிக்கு மேலிருந்த பிறையில் பார்வை விழுந்ததும் எனக்கு மறுபடியும் நம்பிக்கை உண்டாயிற்று. அந்தப் பிறையில் சாவிக் கொத்து ஒன்று இருந்தது. இந்த இழுக்கான, சிந்திக்கத் தக்க செயலைச் செய்யும் பொழுதுங்கூட என்னால் பகவானின் கருணையை நினைக்காமல் இருக்க முடியவில்லை.

கொத்தில் சாவியைத் தேடி நான் மேல் டிராயரைத் திறந்தேன். டிராயரைத் திறக்கும் பொழுது 'கட கட' வென்று சத்தம் கேட்டது. அப்பொழுது இன்னொரு தீக் குச்சியைக் கிழித்துப் பார்த்தேன். டிராயரில் ஒரு கழுத்துச் சங்கிலி, அநேக விதத் தங்க வளையல்கள், தோடுகள் இன்னும் கல் இழைத்த சில நகைகள் இருந்தன. ஆனால் எனக்கு இவ்வளவு நகைகளும் எதற்கு! நான் திருட வேண்டும் என்பதற்காகத் திருட வரவில்லையே! ஜானகியின் உயிரைக் காப்பாற்ற மருந்துக்காக வேண்டியல்லவா திருட வந்திருந்தேன்!

இதை யெல்லாம் யோசித்த நான் ஒரே வளையல் மட்டும் நமக்கு இருந்தால் போதும் என்ற முடிவுக்கு வந்தேன். வளையலும் விலை உயர்ந்ததுதான். அதை நான் விற்கப் போவதில்லை. யாரிடமாவது நாலைந்து ரூபாய்க்கு அடகு வைக்கப் போகிறேன். அந்த ரூபாயைக் கொண்டு மனைவிக்கு மருந்து வாங்கி அளிக்கப் போகிறேன். பிறகு பணம் கிடைத்ததும் நகையை மீட்டு எப்படியாவது அதன் சொந்தக்காரரிடம் சேர்ப்பித்துவிடப் போகிறேன். இதுதானென் தீர்மானம்.

நடுங்கும் கைகளால் நான் ஒரே ஒரு வளையலை மட்டும் வெளியே எடுத்தேன். 'கடவுளே! என்னை மன்னித்து விடு. இதுதான் என் முதல் பாவம்; கடைசி பாவமும் இதுவேதான். இனி இந்த வாழ்க்கையில் இம்மாதிரித் தவறான காரியத்தில் இறங்கவே மாட்டேன்!' என்று மனத்துள் கூறிக் கொண்டேன்.

டிராயரைச் சாத்திவிட்டுப் பின் நகர்ந்தேன். ஏதோ ஒன்று 'தடால்' என்று கீழே விழுந்தது. இருட்டில் திகைத்துப் போய் நான் மரம் போல நின்று விட்டேன். யாராவது இந்தச் சத்தத்தைக் கேட்டு விட்டால் நம் கதி என்ன ஆவது!

சிறிது நேரத்துக்கெல்லாம் யாருடைய அணியோ சலசலக்கும் சத்தம் கேட்டது. ஒவ்வொரு அடியாக அடி மேல் அடி வைத்து யாரோ வருகிறார்கள் என்று தோன்றியது. அடுத்த கணம் இருட்டில் அந்த உருவம் நான் நின்று கொண்டிருந்த அறைக்குள்ளும் நுழைந்து விட்டது. நான் மூச்சு விடக் கூட மறந்து ஸ்தம்பித்து நின்றேன். 'டக்' என்று பித்தானை அழுத்தும் சத்தம் கேட்டது. அடுத்த விநாடி அறை முழுவதும் மின்சார ஒளி பரவி விட்டது. திடீரென்று விளக்கு ஏற்றப்படவே என் கண்களுக்கெதிரே 'குப்'பென்று இருட்டி விட்டது. கண்கள் சில விநாடிகளுக்கு ஒளி யிழந்து விட்டன.

என் கண்கள் மீண்டும் ஒளி பெற்றதும் என்னெதிரில் பயந்தபடி ஒரு பெண்மணி நிற்பதைக் கண்டேன். வியப்பினாலும் பயத்தினாலும் செயலிழந்து அந்தப் பெண்மணி என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். என் தலை சுற்றியது. கால்களுக்கடியிலிருந்த பூமி நழுவுவது போலிருந்தது. நல்லவேளையாகச் சுவரைப் பிடித்துக்கொண்டு விழாமல் தப்பினேன்.

வியப்பின் வேகம் குறைந்ததும் அந்தப் பெண்மணியின் பார்வை மேஜை டிராயரில் விழுந்தது. அவள் வாசற்படிப் பக்கம் சென்றாள். எனக்கும் சுய உணர்வு வந்தது. யாரையோ கூப்பிடப் போகிறாள் என்று எண்ணினேன். உடனே பித்தனைப்போல ஒரே தாவாகத் தாவி வாசற்படியண்டை ஓடி அவள் கால்களில் விழுந்தேன். அவள் பயந்து போய் 'கிரீச்' என்று சத்தமிட்டுப் பின் நகர்ந்தாள். நான் நடு நடுங்கிப் போய், "அம்மா! என்னை மன்னித்து விடுங்கள். யாரையும் கூப்பிட்டு என்னைச் சங்கடத்துக் குள்ளாக்காதீர்கள்" என்று கைகூப்பி வேண்டிக் கொண்டேன்.



கல் சிலை போலப் பேசாமல் நின்ற வண்ணம் அவள் என்னைச் சந்தேகக் கண் கொண்டு பார்க்கலானாள். நான் மறுபடியும், "அம்மா! நானும் நல்ல குடும்பத்தில் பிறந்தவன் தான். வேறு வழி புலப்படாததால் இன்று ஒரு நாளைக்கு மட்டும் திருட்டுத் தொழிலை மேற்கொண்டேன். என்னை நம்புங்கள்!" என்றேன்.

அவள் ஒன்றும் வாய் திறந்து பேசவில்லை. அப்படியே கல் சிலைபோல் நின்று கொண்டிருந்தாள். நான் கண்களை நிமிர்த்தி அவளைப் பார்த்தேன். என் எளிமையைக் கண்டுதானோ, அல்லது நான் 'அம்மா' என்று அழைத்ததைக் கேட்டுத் தானோ, அவளுடைய பயம் அகன்று விட்டது. நான் அவளுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்க மாட்டேன் என்பதை அவள் உணர்ந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்நேரம் இரைந்து கூவி யாரையாவது கூப்பிட்டிருக்க மாட்டாளா!

நான் மிகவும் மெதுவான குரலில் அவளுக்கு என் நிலையை விளக்கிக் கூறினேன். அப்போது அவள் பார்த்த கருணைப் பார்வை அவள் என் சொல்லை நூற்றுக்கு நூறு அப்படியே உண்மையென்று நம்புகிறாள் என்பதை எடுத்துக் காட்டியது. அப்பொழுதும் அவள் வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லவில்லை.

"நான் திருடினேன். ஆனால் நான் திருடன் அல்ல. நீங்கள் டிராயரை வேண்டுமானாலும் திறந்து பாருங்கள். நான் வேறு ஒரு நகையும் எடுக்க வில்லை. இந்த வளையலை அடகு வைத்து அதில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு என் மனைவிக்கு வைத்தியம் செய்யலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால் கடவுளுக்கு அதில் விருப்பம் இல்லை என்று தோன்றுகிறது. இத் தாருங்கள், உங்கள் நகையை நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். திருட்டுத் தொழிலை மேற்கொண்டும்கூட என்னால் என் மனைவியின் உயிரைக் காப்பாற்ற முடியவில்லை" என்று சொல்லி அந்த வளையலை அவள் காலடிகளிலேயே வைத்து விட்டேன். என் கண்களிலிருந்து 'பொல பொல' வென்று இரண்டு சொட்டு நீர் கீழே சொட்டியது.

அந்தப் பெண்மணி ஒரு முறை என் முகத்தைப் பார்த்தாள். பிறகு சிறிது நேரம் கழுத்தைச் சாய்த்துக் கொண்டு ஏதோ யோசித்துக் கொண்டிருந்து விட்டு, "இந்த வளையலை நீயே வைத்துக் கொள்ளு!" என்றாள்.

நான் வியப்பில் ஆழ்ந்து அவள் முகத்தையே பார்க்கலானேன். பிறகு தழுதழுத்த குரலில், "அம்மா! தாங்கள் தெய்வம்தான். தங்கள் கருணையினால் இன்று என் மனைவியின் உயிர் எமன் வாயிலிருந்து மீட்கப்படும். தங்களுடைய இந்த உபகாரத்தை நான் ஆயுள் உள்ள மட்டும் மறக்கமாட்டேன். இதை எப்படியாவது அடகிலிருந்து மீட்டுக் கொண்டு வந்து தங்களிடமே சேர்ப்பித்து விடுவேன்" என்றேன்.

"திருப்பித் தரவேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. இங்கிருந்து நீ சீக்கிரம் வெளியேறி விடு!" என்று சொல்லி வாசற்புறம் செல்ல வழிகாட்டினாள் அந்தப் பெண்மணி.

*

மெதுவாக நான் அந்த அறையிலிருந்து வெளியே நடந்தேன். அப்பொழுது என் மனத்தில் விதவிதமான எண்ணக் குவியல்கள் குவிந்து கொண்டிருந்தன. நான்கைந்து படிகள் இறங்குவதற்குள்ளாகவே, யாரோ, "திருடன், திருடன்!" என்று கூச்சலிடுவது காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்தாற் போல யாரோ 'தட தட' வென்று மாடிப்படி ஏறி வரும் சத்தமும் கேட்டது. ஒன்றும் புரியாமல் நான் மறுபடியும் அந்தப் பெண்மணியின் அறைக்கே வந்து விட்டேன். 'திருடன், திருடன்' என்று கூவியதை அவளும் கேட்டிருந்தாள். வருத்தமும் கவலையும் ஒருங்கே சூழ அவள் அறையின் நடுவில் ஜடமாக நின்று கொண்டிருந்தாள்.

குழந்தைகளைப் போல நான் அவளுடைய காலடிகளில் விழுந்து, "அம்மா, என்னைக் காப்பாற்றுங்கள்!" என்று கதறிவிட்டேன்.

அடுத்த கணம் அந்தப் பெண்மணி மின்சார விளக்கை அணைத்து விட்டாள். பிறகு சட்டென்று என் கைகளைப் பிடித்துக் 'கர கர' வென்று அடுத்த அறைக்கு இழுத்துச் சென்றாள்.

பின்னால் வந்து கொண்டிருந்தவர்கள் வாசற்படியிலேயே நின்று கொண்டு கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். இருட்டைப் பார்த்த அவர்களுக்கு உள்ளே நுழையத் துணிவு உண்டாகவில்லை போலும்! அந்தப் பெண்மணி மிகவும் மெதுவான குரலில், என் காதருகே வந்து, "சீக்கிரம்! என் படுக்கையில் படுத்துத் தூங்கி விடு!" என்றாள்.

"உங்கள் படுக்கையிலா!" என்று வியப்புடன் கேட்டுச் சற்றுத் தயங்கினேன்.



"நான் பாவாடை கட்டிக் கொண்டிருக்கும் போது அவன் திடீரென்று கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்து விட்டான்!"
"ஹல்ஹா, நீங்கள் பாவாடையா கட்டிக் கொண்டிருந்தீர்கள்......?"
"நான் கட்டிக் கொள்ளவில்லை, ஐயா! என் குழந்தைக்குக் கட்டிக் கொண்டிருந்தேன்!"

"ஆமாம், நேரம் ஆக்காதே! 'அம்மா' என்று என்னை அழைத்திருக்கிறாய். இதை விட்டால் உன்னைக் காப்பாற்ற வேறு வழி கிடையாது. 'அம்மா!' என்று அழைத்த உன்னைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு என்னுடையது" என்றாள் அவள்.

"நான் பிடிபட்டு விட்டால் தங்கள் கதி என்ன ஆகும்!" என்றேன்.

"அவர்கள் வந்ததும் அறைகளைச் சோதனை போடுவார்கள். நீ தப்பவேண்டுமானால், உன் மனைவியைக் காப்பாற்ற வேண்டுமானால், நான் சொன்ன பிரகாரம் செய். இதை விட்டால் வேறு வழி இல்லை" என்றாள் அவள்.

அதற்கு மேல் என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. சின்னஞ் சிறு பாலகன் தன் தாயாருக்கருகே படுத்துத் தூங்குவானே, அது போல நான் கருணையே உருவான அந்த தாயின் படுக்கையில் படுத்துக் கண்களை மூடிக் கொண்டேன்.

இரண்டொரு நிமிஷங்களுக்கெல்லாம் அநேகம் பேர் லாந்தரை எடுத்துக் கொண்டு வந்து விட்டனர். ஒருவன் படபடக்கும் குரலில், "மன்னி! மன்னி! உங்கள் அறையில் யாராவது இருடன்-இருடன் ஒளிந்து கொண்டிருக்கிறான், பாருங்கள்!" என்றான்.

அந்த அம்மாள் அடக்கமான குரலில், "என்ன! திருடனா! எங்கே! என் அறையிலா! எதற்காக வீணில் கூச்சலிட்டு இராத் தூக்கத்தைக் கெடுக்கிறாய்!" என்றாள்.

"இல்லை, மன்னி! இந்தப் பக்கம் ஒரு ஆள் வருவதை என் கண்களாலேயே பார்த்தேன்."

"என் அறையை வேண்டுமானாலும் வந்து பார்த்துக் கொள்ளுங்கள். அறைக்குள் வந்த திருடன் எங்கே ஓடிவிடப் போகிறான்!"

"அதுதான் நானும் யோசிக்கிறேன். வந்தவன் எங்கே ஓடிவிடப் போகிறான்!"

"இருடன் வந்ததாக ஏதாவது சொப்பனம்-கிப்பனம் கண்டிருப்பாய்! சொப்பனத்தில் வந்த திருடன் விழித்துக் கொண்டபின் எங்கேயாவது கிடைத்ததுண்டா!"

"மன்னி! திருடன் வந்ததை நான் என் கண்களாலேயே பார்த்தேன். சொப்பனம் கிப்பனம் காணவில்லை. இதென்ன, அண்ணா தூங்கிக் கொண்டிருக்கிறாரா, என்ன!"

"ஆமாம், அதிகமாகக் கூச்சலிடாதே! தூக்கம் கலைந்து எழுந்துவிடப் போகிறார்!"

"வா, பாபு! திருடன் வேறு எங்கேயோ ஒளிந்து கொண்டிருக்க வேண்டும்."

அடுத்த நிமிஷமே எல்லோரும் அந்த அறையிலிருந்து வெளியேறி விட்டார்கள். நான் ஒரு நீண்ட அமைதியான மூச்சு விட்டுக் கட்டிலிலிருந்து கீழிறங்கினேன்.

அந்தத் தாயின் காலடிகளிலே தலை வணங்கி, "இன்று நீங்கள் உங்கள் உயிரைப் பணயம் வைத்து என் உயிரைக் காப்பாற்றினீர்கள். இந்த உதவிக்கு நான் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்வேன்! தாயே! நான் எந்தப் பக்கமாய் போகவேண்டும்! சொல்லுங்கள்!" என்று கேட்டேன்.

"சற்றுப் பொறு. அவர்கள் எல்லோரும் தூங்கட்டும்" என்றாள் அந்த அம்மாள்.

"ஆமாம், உங்கள் கணவர் வந்துவிட்டால்!"



பையன்:—அப்பா யாரோ இந்த மணி பர்ஸைத் தெருவில் போட்டு விட்டார்கள். என் கையில் கிடைத்தது!

அப்பா (சந்தேகத்துடன்):—ஏண்டா, நிஜமாகவே யாராவது கெட்டுப் போக்கினதுதானா இது?

பையன்:—ஆமாம், அப்பா! அவரே இதைத் தேடிக் கொண்டிருந்தாரே! நான் பார்த்தேனே!

தலை குனிந்தபடியே அந்த அம்மாள் துயரம் தோய்ந்த குரலில், "இரவு வேளைகளில் அவர் வீட்டுப் பக்கமே வருவதில்லை!" என்றாள்.

ஆச்சரியம்! கருணையே உருவான அம்மாளுக்கும் இவ்வளவு துயரமா! அந்த அம்மாள் அப்பொழுது சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். சிறிது நேரங் கழித்து அந்த அம்மாள் தன்னை மறந்து, "மனைவிக்காகக் கணவன் திருடனாகக் கூட ஆகிவிடுகிறான். ஆனால் என் கணவர்...... என் கணவர் தான்......!" என்று இலேசாக முணு முணுத்தாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் எல்லோரும் தூங்கி விட்டார்கள். நான் அந்தப் பெண் மணியின் காலடிகளில் தலைவணங்கி, "அம்மா! இந்த ஜன்மத்தில் நான் உங்களுடைய உபகாரத்தை மறக்கவே மாட்டேன்!" என்றேன்.

அவள் என்னை வாசற்படி வரை கொண்டு விட வந்தாள்.

'உலகத்தில் தெய்வம் என்று சொல்கிறார்களே, அது இந்த அம்மாளை விட எந்த விதத்தில் உயர்ந்ததாக இருக்க முடியும்! எவளுடைய உள்ளம் ரோஜா இதழ்களைக் காட்டிலும் மென்மையானதாக இருக்கிறதோ, கருணையே உருவாக இருக்கிறதோ, பரிசுத்தத்தில் பக்னுப் புகைக்கு ஈடாக இருக்கிறதோ, கடமை என்று வரும் பொழுது வஜ்ரத்தைக் காட்டிலும் கடினமானதாக இருக்கிறதோ, அவள்தான் உலகத்துக்குத் தாய்!' என்று வழி நெடுக எண்ணமிட்டுக் கொண்டே நடந்தேன்.

# சோதனை மாதம் வருகிறது!

ரஜனி

கொழும்பு, ஜூலை 12.

ஆகஸ்டு 5-ம் தேதிக்குப் பின்னர் இலங்கை இந்தியர்களுக்கு மிகவும் கடுமையான சோதனைகளும் தொல்லைகளும் ஏற்பட விருப்பதாக நம்பிக்கையான வட்டாரங்கள் கூறுகின்றன. இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளுவதற்கு அளிக்கப்பட்டிருந்த காலத் தவணை ஆகஸ்டு 5-ம் தேதியுடன் முடிகின்றது. அதன் பிறகு இந்தியர் பாகிஸ்தானியர் பிரஜாவுரிமைச் சட்டத்தின்படி இந்நாட்டில் பிரஜாவுரிமை கோர யாருக்கும் உரிமை யில்லை. அந்தத் தேதிக்குள் மனுக் கொடுக்காதவர்கள் இலங்கையர்களாக நினைக்காமல் இந்தியர்களாகவே இந்நாட்டில் தொடர்ந்து வசிக்க விரும்புகிறார்களென்பது தான் அர்த்தம். அவர்கள் நிலைமையை வரையறுக்கச் சில சட்டங்கள் வரப்போவதாகத் தெரிகிறது.

தாற்காலிக அல்லது நிரந்தர வாச பர்மிட்டுப் பெற்றிருப்பவர்களின், அதாவது இடையில் இந்தியாவுக்கு ஒரு முறை போய்விட்டு இலங்கைக்குத் திரும்புவதற்காக வாச பர்மிட்டுப் பெற்றுக்கொண்டு போய் வந்தவர்களின் நிலைமையைத் தெளிவு படுத்தச் சட்டமியற்றப் படவிருக்கிறதா என்று இவ்வாரம் பார்லிமெண்டில் ஸ்ரீ ஸி. வி. வேலுப் பிள்ளை கேட்ட பொழுது அரசாங்கத்துக்குத் தற்சமயம் அவ்வித எண்ணம் எதுவுமில்லை யென்று பிரதம மந்திரி பதிலளித்தார். ஆயினும் இலங்கையரல்லாதார் அனைவருக்கும் பொதுவான சில சட்டங்கள் இயற்றப்பட விருப்பதாயும் அவற்றின் பிரகாரம் இலங்கைய ரல்லாதார்கள் குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள் தங்களுடைய பெயர்களையும் விலாசங்களையும் அரசாங்கத்தினிடம் பதிவு செய்து கொள்ளுமாறு கோரப்படுவார்களென்றும் தெரிகிறது. ஏற்கெனவே ஓரிரண்டு வருட காலம் இலங்கையிலிருக்க தாற்காலிக வாச பர்மிட்டுப் பெற்றவர்களுக்கு அவர்களது பர்மிட்டுகள் நீடிக்கப்பட மாட்டாதென்றும் பர்மிட்டில் குறிப்பிட்ட காலத் தவணை முடிந்த பின் அவர்கள் நாட்டை விட்டு வெளியேறுமாறு கோரப்படுவார்களென்றும் கூறப்படுகிறது. இது தவிர வருஷா வருஷம் இலங்கையரல்லாதார்களில் ஓராயிரம் பேர்களுக்கு இலங்கைப் பிரஜா உரிமை வழங்க ஒரு சட்டமியற்றப்பட விருக்கிறதாம். சர்க்கார் கட்சிக்குப் பலவகையிலும் உதவியா யிருப்பவர்களுக்கும் இந்நாட்டில் பணம் முடக்கியுள்ள முதலாளிமார்களுக்கும்தான் இந்தச் சட்டத்தின்படி பிரஜாவுரிமை கிடைக்குமே தவிர, மற்றவர்கள் ஒரு முறை இந்தியாவுக்குப் போனால் அதோடு இந்தியாவுக்கே போய்விட வேண்டுமென்றும் இலங்கைக்குத் திரும்ப அனுமதிக்கப்படமாட்டார்களென்றும் பேசிக்கொள்ளப் படுகிறது. பொதுவாக ஆகஸ்டு 5-ம் தேதிக்குப் பிறகு தங்கள் நிலைமை யாதாகுமோவென்று இந்தியர் அனைவருடைய மனதிலுமே ஒரு பீதி பலமாகக் குடி கொண்டிருக்கிறது.



சபா காரியதரிசி:-பாகவதர்வாள்! கச்சேரியில் எல்லோரும் கலைந்து விட்டார்கள். நானும் போய்வருகிறேன். தயவுசெய்து இந்த ஜமக்காளங்களை அழகாகச் சுருட்டி நீங்கள் போகும்போது என் வீட்டில் கொடுத்து விடுங்கள்!

## ஸ்ரீ மேனன் பேசினார்

இந்திய ஹை கமிஷனர் ஸ்ரீ கே. பி. கேசவமேனன் இலங்கைக்கு வந்த ஒரு மாதத்துக்குப் பிறகு இவ்வாரம் தான் முதன்முதலாக இந்தியா—இலங்கை உறவுகளைப் பற்றிப் பேசினார். அவருக்கு இலங்கை இந்திய காங்கிரஸ், இந்தியன் கிளப், இலங்கை இந்திய வர்த்தகச் சங்கம் ஆகிய ஸ்தாபனங்கள் விருந்துபசாரம் நடத்தின. இந்திய வர்த்தகச் சங்கம் அளித்த விருந்துக்கு பிரதம மந்திரியும் கவர்னர் ஜெனரலும் மந்திரி ஸ்ரீ குணசிங்காவும் வந்திருந்தார்கள். அதில் ஸ்ரீ மேனன் அபார ராஜதந்திரத்துடன் மணி மணியாகப் பேசினார்.

இந்தியாவுக்கும் இலங்கைக்கு மிடையில் நட்பும் நல்லெண்ணமும் ஒத்துழைப்பு மிருக்குமானால் உலகுக்கே பெரிய நன்மையாயிருக்குமென்றும் இவ்விரு நாடுகளுக்கு மிடையில் நேச உறவைத் தவிர வேறுவிதமான உறவைத் தம்மால் சிந்திக்கவும் முடியாதென்றும் கூறிவிட்டு, "இலங்கையில் இந்திய ஹை கமிஷனர் பதவி பட்டு மெத்தையில்லை; பல சிக்கல்களும் சங்கடங்களும் நிறைந்தது. என் வேலையைச் சுலபமாக்க உங்கள் எல்லோருடைய ஒத்

உழைப்பையும் முக்கியமாக எனது ரைட் ஆனரபிள் நண்பர் பிரதமர் சேனநாயகாவின் உதவியையும் நான் பெரிதும் எதிர் பார்க்கிறேன்'' என்றார் ஸ்ரீ மேனன். இரு நாடுகளுக்கு மிடையில் தீராமலிருக்கும் தகராறுகளில் சமரச முடிவு செய்வது அனுபவ சாத்திய மென்றே உறுதியாக நம்புவதாயும் அழுத்திக் கூறினார்.

## இந்தியாவின் ஆட்சேபம்

**பி**ரதமர் சேனநாயகா கண்டியின் அருகில் நடந்த ஒரு கூட்டத்தில் தாறுமாறாகப் பேசியது இந்திய அரசாங்கத்துக்கு மிகுந்த மன வருத்தத்தைக் கொடுத்திருக்கிறது. இந்தியர்களை இலங்கை கொடுமைப் படுத்திய பொழுதிலும் இந்தியாவில் இப்பொழுதுள்ள அரசாங்கமும் சரி; சுதந்திரத்துக்கு முன்னிருந்த அரசாங்கமும் சரி, சாத்தியமான சமயங்களி லெல்லாம் பதிலே எதிர்பாராமல் இலங்கைக்கு அரிசி அனுப்பி உதவியுள்ளது. அப்படி இருக்க இலங்கை இந்தியர் அனைவருக்கும் பிரஜா உரிமை யளித்தால்தான் அரிசி கொடுக்க முடியுமென்று இந்தியா நிபந்தனை போட்டதாயும் பிடி அரிசிக்காக ஒரு நாட்டை விற்கத் தாம் தயாராயில்லை யென்றும் பிரதமர் சேனநாயகா கண்டியில் கூறினார். இதை இந்தியா கடுமையாக ஆட்சேபித்திருக்கிறது. அரிசி கொடுக்க இந்தியா ஒரு போதும் அரசியல் நிபந்தனைகளைப் போட்டது கிடையாதென்றும் பிரதமரின் கூற்று பொய்யென்றும் இங்குள்ள இந்திய ஹை கமிஷனர் மூலம் டில்லி அரசாங்கம் தெரிவித்துக் கொண்ட பொழுது, ''ஓநாய் ஆட்டுக்குட்டி கதை'' மாதிரி இப்பொழுதுள்ள அரசாங்கத்தின் மீது தாம் குற்றஞ்சாட்டவில்லை யென்றும் 1942-ம் வருடம் டில்லிக்குத் தாமே நேரில் சென்று அரிசிப் பேச்சுக்கள் நடத்திய பொழுது இந்திய அதிகாரிகள் அப்படி நிபந்தனை போட்டார்களென்றும் பிரதமர் சேனநாயகா மழுப்புகிறார். எப்படி யிருந்தாலும், ஒரு அண்டை தேசத்தைப் பற்றிப் பொதுக் கூட்டத்திலே நாட்டின் பிரதமர் தாறுமாறாகக் குற்றஞ் சாட்டுவது கேவலமானதென்று இந்திய ஹை கமிஷனர் காரியாலய அதிகாரி யொருவர் கூறினார்.

## கண்டியில் தமிழ்ச் சங்கம்

**யா**ழ்ப்பாணத்தில் நடந்த தமிழ்த் திரு விழாவின்பயனாக இலங்கையில் தமிழ் உணர்ச்சி பெருகி யிருக்கிறது. பல இடங்களில் தமிழ்ச் சங்கங்கள் தொடங்கித் தமிழ் விழாக்களும் நடைபெறுகின்றன. இலங்கை மத்தியப் பகுதியில் வசிக்கும் தமிழ் அபிமானிகள் கண்டிமா நகரத்தில் ஜூலை 8உ கூடி ''மத்திய மாகாணத் தமிழ்ச் சங்கம்'' ஏற்படுத்தத் தீர்மானித்தனர். திரு டி. ராமானுஜம் எம். பி. அவர்களைத் தலைவராகவும், திரு கே. வி. தம்பித்துரையைக் காரியதரிசியாகவும், பல தமிழ்ப் பிரமுகர்களை அங்கத்தினராகவும் கொண்ட செயற் குழு நிறுவப்பட்டது. அடுத்த பாரதியார் தினத்தன்று ஆரம்பவிழா விமரிசையாகக் கொண்டாடப்படும் என்று தெரிகிறது.

# கல்யாணமும் காசி யாத்திரையும்

நா. ராமச்சந்திரன்

ராமகப்புவுக்குக் கல்யாணமாக நாள் பிடித்தது என்று சொல்ல முடியாது. பி. ஏ. பட்டம் பெற்றவுடனேயே அவன் பெற்றோர்கள் அவனுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று நினைத்தார்கள். அதற்கு முட்டுக் கட்டைபோட்டான் ராமகப்பு. 'படித்துவிட்டால் மட்டும் போதுமா? உத்தியோகம் என்று ஒன்று வேண்டாமா?' என்பதுதான் அவன் வாதம். இந்த விஷயம் நியாயமாகப் படவே அவனுடைய தகப்பனார் கல்யாணத்தைப் பற்றி அழுத்திப் பேசாமல் இருந்து விட்டார். ஆனால் அவன் தாயார் சும்மா இருக்கவில்லை. தன்னுடைய ஒரே பிள்ளையான ராமகப்புவுக்குச் சீக்கிரமே கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள்.

"ராமகப்பு, நான் சொல்லுவதைக் கேளுடா. வேலைக்கும் கல்யாணத்துக்கும் என்னடா சம்பந்த மிருக்கு? இது பாட்டுக்கு இது நடந்தால், காலா காலத்திலே நீ படிச்சிருக்கிற படிப்புக்கு உத்தியோகம் தானாகத் தேடிண்டு வருகிறது" என்று சொன்னாள் அவன் தாயார்.

"வருமடீ வரும்! உத்தியோகம் உன் பிள்ளையைத் தேடிண்டு வரும். என்ன. உன் பிள்ளை பிரஹஸ்பதி பார்! போட்ட அப்ளிகேஷனுக்கு எல்லாம் பதில் வரட்டும். பிறகு கல்யாணத்தைப் பற்றிப் பேசிக் கொள்ளலாம்" என்று எரிச்சலுடன் பதில் சொன்னார் அவன் தந்தை.

"ஆமாம்! ஆமாம்! நீங்களே எல்லாத்தையும் சொல்லிவிடுங்கோ. உங்களுக்குக் கல்யாண மாகும் போது உத்தியோகம் பார்த்துக் கொண்டுதான் இருந்தேளாக்கும்! கல்யாணமான அப்புறம்தானே எங்கப்பா வேலை பண்ணி வைத்தார்? அதுமாதிரி ராமகப்புவுக்கும் வருகிற மாமனார் வேலை பண்ணி வைக்கிறார். அதுக்காகச் சீரும் செனத்தியுமாக வரும் வரனை யாராவது விட்டு விட்டு நிற்பானோ?" என்று அங்கலாய்த்தாள் ராமகப்புவின் தாயார்.

"போதும், போதும். வாயை மூடு. உங்கள் அப்பா எனக்கு வேலை பண்ணி வைத்த அழகைச் சொல்ல வந்து விட்டாயாக்கும்! ராமாயணம்தான். அதனாலே தான் என் பிள்ளைக்கு நானே வேலை பண்ணி வைப்பது என்றிருக்கிறேன். நான் உங்க அப்பாவிடம் பட்ட அவஸ்தை போதாதா? என் பிள்ளை வேறு அது மாதிரி அவன் மாமனாரிடம் படணுமா?"

"எங்க அப்பாகிட்டே நீங்க அவஸ்தைப்பட்டேளா? உங்களுக்குக் கல்யாணம் பண்ணி வைத்து, வேலை பண்ணி வைத்துக் காசாலும் ஒத்தாசை பண்ணினாரே. அதற்கு இதுவும் சொல்லுவேள், இன்னமும் சொல்லுவேள்......" அந்த அம்மாளின் கண்களில் நீர் அரும்பி, அழுகை பொத்துக் கொண்டு வர எந்த நிமிஷமும் தயார் என்று கட்டியம் கூறிற்று.

ராம கப்புவுக்குத் தர்ம சங்கடமாகப் போய்விட்டது. தன்னுடைய கல்யாண விஷயமாகத் தன் பெற்றோர்களுக்குள் இப்படி வாக்குவாதம் வளரும் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை.



"அம்மா, நீ சொல்கிறபடியா இப்போ காலம் இருக்கு? அந்தக் காலத்திலே பெண்ணைக் கொடுக்கும்பொழுது அதன் பெற்றோர்கள் பொறுப்பை உணர்ந்திருந்தார்கள். பையனுக்கு வேலை இல்லாமல் இருந்தால் வேலை பண்ணி வைத்தார்கள். அதெல்லாம் இப்போ நடக்குமா? 'கொட்டுடா மேளம், கட்டுடா தாலின்னு' சொல்லிவிட்டு, 'பெண்ணை அழைச்சுண்டு நடடா' என்பார்கள். 'உத்தியோகம் கித்தியோகம்' என்று இழுத்தால் 'எக்கேடாவது கெட்டுப் போடா! கல்யாணம் செய்து கொள்கிறபோது எல்லாத்தையும் யோசித்துத்தானே சரின்னு சொன்னே' என்பார்கள். இதையெல்லாம் கேட்டுண்டு பெண் பக்கத்திலே நின்று கொண்டிருந்தால், அவ்வளவுதான்! "ஹஸ்பெண்ட்! அதற்காக நீங்க எதற்குக் கவலைப்படறேள்? எனக்கு 'மண்டே' அன்னிக்கு 'இன்டர்வியூ' இருக்கு. கட்டாயம் 'ஸெலக்ட்' ஆய்விடும். முதலில் நான் வேலைக்குப் போய்ப் பிறகு உங்களுக்குச் சிபார்சு செய்கிறேன். அந்த மானேஜரை என் சிநேகிதிக்குத் தெரியும்' என்று சொல்லும். மேலத் தெருவிலே......"

"போதுமடா 'லெக்சர்!' அப்பாமாதிரி தானே பின்னையும் இருக்கும். நல்ல இடத்திலே பணமும் காசுமா வருகிறதேன்னு சொன்னேன். இஷ்டப்பட்டால் பண்ணிக்கோ; இல்லா விட்டால் போயேன். மொத்தத்திலே அம்மா பேச்சை கேட்கிறதில்லேன்னு த்வஜம் கட்டிண்டு இருக்கே. அவ்வளவுதானே?"

'விடு விடு' என்று சமையலறைப் பக்கம் போய்விட்டாள் ராமசுப்புவின் தாயார்.

★

தாயாரின் மனத்தைப் புண் படுத்தி விட்டோம் என்று ராமசுப்புவுக்கு மனச்சாட்சி குத்திக் காட்டிக் கொண்டிருந்தது.



அவனுடைய தாயார் சொல்லும் இடம் என்னமோ வெகு நல்ல இடம்தான். பெண்ணின் தகப்பனார் தபால் இலாகாவில் நல்ல சம்பளத்தில் இருந்தார். பெண்ணும் சுமாராக இருக்கும். கல்யாணம் செய்து கொண்டால் அவரே பார்த்து ஏதாவது ஒரு இலாகாவில் ராமசுப்புவையும் நுழைத்துவிட முடியும். ஆனாலும் ராமசுப்புவுக்கு ஒரு உத்தியோகத்தில் இல்லாமல் கல்யாணம் செய்து கொள்வதில் விருப்பமில்லை. தந்தை என்னமோ இதைப் புரிந்து கொண்டு விட்டார். தாயைப் புரியவைக்க வேண்டுமே!

ராமசுப்புவும் சும்மா இருக்க வில்லை! ராமபாணம் போல் மூலைக்கு ஒரு 'அப்ளிகேஷன்' போட்டு வைத்துத்தான் இருந்தான். ராமன் வில்லினின்றும் கிளம்பிய பாணங்கள் மூலைக் கொன்றாகக் கிளம்பி ராக்ஷஸர்களின் தலைகளைக் கொய்தன. ராமசுப்புவின் 'அப்ளிகேஷன்'களோ முதலாளிகளின் இருதயத்தைப் பிளக்கமாட்டாமல் அந்தந்தக் கம்பெனிகளின் பைல்களில் 'அசைக்க முடியாதபடி ஸ்திரந்தர ஸ்தானம் பெற்றன.

கடைசியில் அம்மாவின் கட்சிதான் வெற்றி பெற்றது. ராமசுப்பு எவ்வளவோ கண்டிப்பாக இருந்த போதிலும் அவனைக் கரைத்துச் சம்மதம் வாங்கி விட்டாள்.

அம்மா பார்த்த பெண்ணை நிச்சயமாகி முகூர்த்த நாளும் குறிப்பிடப் பட்டது. கல்யாணத்துக்குள் ஏதாவதொரு வேலையில் புகுந்து விட வேண்டும் என்று அரும்பாடு பட்டான் ராமசுப்பு. எல்லாம் நினைத்தபடி நடக்கிறதா?

கல்யாணத்திற்கு முதல்நாள் ராமசுப்புவும் அவனுடைய பெற்றோர்களும் வந்திறங்கினார்கள். மாப்பிள்ளை வந்தவுடன் கணபதி தன்னுடைய பந்துக்களுக்கு ராமசுப்புவை அறிமுகம் செய்து வைத்தார். அசட்டுச் சிரிப்புடன் வணக்கம் தெரிவித்துக் கொண்டான் ராமசுப்பு.

"நீங்கள் பி. ஏ. வா? பி. காமா?" என்று கேட்டார் கணபதியின் தூரபந்து ஒருவர்.

"பி. ஏ. 'பாஸ் கோர்ஸ்' தான்" என்று பதிலளித்தான் ராமசுப்பு.

அவர் அதோடு நிற்கவில்லை. "கவர்மெண்ட் சர்வீஸில் இருக்கிறீர்களா? அல்லது தனிக் கம்பெனி ஏதாவதொன்றில் வேலையா?" என்று கேட்டு வைத்தார்.

ராமசுப்புவுக்குப் பதில் என்ன சொல்வதென்று தெரியவில்லை, திரு திரு வென்று விழித்தான். பிறகு சமாளித்துக்கொண்டு "இனி மேல்தான்..." என்று இழுத்தான்.

அந்த இடத்தை விட்டு அவர் நகர்ந்த பிறகுதான் அவனுக்கு மன நிம்மதி ஏற்பட்டது. பார்க்க வருகிறவர்கள் ஒவ்வொருவரும் இதே மாதிரிக் கேள்விகளைத்தான் கேட்டார்கள். 'இவர்களுக்கு இந்த ஒரு கேள்வியைத் தவிர வேறு கேள்வியே தெரியாதோ ?' என்று அலுத்துச் சலித்துக் கொண்டான் ராமசுப்பு.

★

பொழுது விடிந்தால் கல்யாணம். ராமசுப்புவுக்கு இரவு தூக்கமே பிடிக்கவில்லை. ஒரு உத்தியோகத்தில் இல்லாமல் கல்யாணம் செய்து கொள்வதில் கடுகளவு கூட அவனுக்குத் திருப்தியில்லை.

ஒரு சுமங்கலிப் பாட்டி ராமசுப்புவின் மாமியாரிடம் "சங்கரி, உன் மாப்பிள்ளை கண்ணுக்கு லட்சணமா நன்னாத்தான் இருக்கான். எங்கே வேலை, என்ன சம்பளம் ?" என்று விசாரித்தாள்.

ராமசுப்புவின் மாமியார், "மாப்பிள்ளை பி. ஏ. பாஸ் பண்ணியிருக்கார். இனிமேல்தான் வேலையாகணும்" என்று சொன்னாள்.

அதற்கு அந்தப் பாட்டி என்ன பதில் சொன்னாள் தெரியுமா ? "ஏண்டி சங்கரி ! அதற்குள்ளே கோமதிக்குக் கல்யாணத்துக்கு என்ன அவசரம் ? வேலை வெட்டி இல்லாத பிள்ளைக்குப் பெண்ணை கொடுக்காத போனால் யார் அடிச்சா ? முன்னைப் போலவா இப்போ காலம் இருக்கு ?" என்று அலுத்துக் கொண்டாள்.



சபைக் காரியதரிசி :—கச்சேரி கேட்கிறீர்களே ! இதற்கு முன்னால் பாடி இருக்கிறீர்களா ?

இளம் வித்வான் :—நாலு ஐந்து தேங்காய் மூடிக் கச்சேரிகள் செய்திருக்கிறேன்.

காரியதரிசி :— அதை எப்படி நான் நம்புவது ?

வித்வான் :—வேணுமென்றால் வீட்டிற்கு வாருங்கள். நாலு ஐந்து கொட்டாங்குச்சிகள் வைத்திருக்கிறேன், காண்பிக்கிறேன்.

அடுத்த அறையிலிருந்த ராமசுப்புவுக்கு இந்தச் சம்பாஷணை காதில் விழத்தான் செய்தது. அப்போது அவன் இருதயம் காய்ந்த மூங்கில் உடைவது போல் 'மளுக்' கென்று முறிந்து விட்டது.

பொழுது விடிந்தவுடன் ராமசுப்பு மங்கள ஸ்நானம் செய்து விட்டு மணையில் உட்கார்ந்து கொண்டான். தன்னைப் பற்றி யார் யார் எப்படி எப்படி பேசிக் கொள்கிறார்கள் என்று கேட்பதற்காக அவன் காதுகள் அவனை அறியாமலே நிமிர்ந்து நின்றன. முதல் நாள் இரவு தன்னைப் பற்றி ஒரு வயதான ஸ்திரீ பேசியது அவன் மனத்தில் மீண்டும் மீண்டும் ஞாபகத்திற்கு வந்து கொண்டிருந்தது.

★

சாஸ்திரிகள், மாப்பிள்ளை காசி யாத்திரைக்குப் போக வேண்டிய கட்டத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார். ஏற்கனவே அசடு வழிந்திருந்த ராம சுப்புவின் முகத்தில் கொஞ்சம் மையைக் கொண்டுவந்து தீட்டினாள் அவன் தாயார். கையில் ஒரு சிறு மூட்டை, குடை, பிரம்பு, விசிறி முதலியவை சகிதம் ராம சுப்பு யாத்திரைக்காக வெளியே வந்தான். மேளக்காரன் கெட்டி மேளம் வாசித்தான். ஆனால் ராம சுப்புவின் மனத்தில் நிம்மதியில்லை. தன்னைப் பற்றி கௌரவமாகப் பேச அங்கு நாலு பேர் இல்லையே என்றுதான் அவன் கவலைப்பட்டான்.

காசி யாத்திரைக்காகப் புறப்பட்டு வந்த ராம சுப்புவை அப்போதுதான் பார்த்தவர்கள் ஒருவருக்கொருவர் குசலம் விசாரித்துக் கொண்டனர். அப்போதும் அவனுடைய உத்தியோகத்தைப் பற்றின பேச்சுத்தான் முதல் ஸ்தானம் வகித்தது.

ஏற்கனவே குமுறிவந்த துக்கத்தை அடக்க முடியாமலிருந்த ராமசுப்புவுக்கு, மற்றவர்கள் பேசுகிற பேச்சுகள் எல்லாம் காரசாரமாக விழுந்தன. இருந்தாலும் என்ன செய்ய முடியும் ? அந்த நிமிஷத்தில் ஒரு வேலையைச் சம்பாதித்துக் கொள்ள முடியுமா ?

கையிலே பிரித்த குடையுடனும் யோக வேஷ்டியுடனும் ராமசுப்பு காசியாத்திரைக்காக நாலு அடிகள் எடுத்து வைத்தான். அவனது கவனம் தன்னைச் சுற்றி

கின்றவர்களிடம் சென்றது. பிறகு ஏதோ நினைத்துக் கொண்டான். பக்கத்தில் நின்றிருந்த சாஸ்திரிகளைப் பார்த்து மெதுவான குரலில், "கொஞ்சம் மன்னிக்கணும். என் சிநேகிதன் அதோ நிற்கிறான். கொஞ்சம் சங்கோசி. அவனைக் கவனிச்சுட்டு வரேன்" என்று சொல்லிக் கொண்டே காசியாத்திரைக் கோலத்துடன் 'விறு விறு' வென்று நடந்து விட்டான்.

கல்யாண வீட்டிற்குப் பக்கத்திலேயே ஒரு சிறு சந்து இருந்தது. ராமகப்பு அந்தச் சந்து வழியாகப் போனானே தவிர, திரும்பி வரவே இல்லை!

அரை மணி நேரமாகக் கல்யாண வீடு அமர்க்களப்பட்டதை தவிர காசி யாத்திரைக்காக வெளியே கிளம்பின ராமகப்பு போன இடம் தெரியாமல் போய்விட்டான்! "சிநேகிதனை அழைத்து வருகிறேன் என்றுதான் போனார்" என்றார் சாஸ்திரிகள். அவரிடம் தானே அவன் சொல்லிக் கொண்டு போனான்?

இரண்டு மணி நேரம் கழிந்தது. ராமகப்புவின் பெற்றோர்களும், சம்பந்திகளும் மனமொடிந்து உட்கார்ந்திருந்தபோது ஒரு ஆள் கடிதம் ஒன்றைக் கொண்டுவந்து ராமகப்புவின் தந்தையிடம் நீட்டினான்.

"அப்பா,

நான் எவ்வளவு பிடிவாதம் பிடித்தும் எனக்கு வேலை ஆவதற்கு முன் நீங்கள் கல்யாணத்தை நிச்சயம் செய்து விட்டீர்கள். கல்யாண வீட்டிற்கு வந்தவர்கள் அத்தனைபேரும் என் உத்தியோகத்தைப் பற்றித் தான் விசாரித்தார்கள். அப்பொழுது எனக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல் இருந்தது. இருந்தாலும் அதிர்ஷ்டம் என் பக்கம் இருந்தது என்று தான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் என் நண்பன் ரகு நான் போட்ட அப்ளிகேஷனு'க்கு வந்த 'ஆர்டரை'த் தூக்கிக் கொண்டு இங்கு வருவானா? உத்தியோகத்தை நாளையதினமே ஏற்க வேண்டுமாதலால் அதை ஏற்றுக் கொள்ள இன்றைய விமானத்திலேயே காசிக்குச் செல்கிறேன். காசி சர்வகலாசாலையில்தான் வேலை. 'உத்தியோகத்திற்குப் பிறகுதான் கல்யாணம்' என்ற தத்துவத்தை நீங்கள் யாவரும் எனக்குப் போதித்து விட்டபடியால், சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் வேலையை ஒப்புக் கொள்ளச் செல்கிறேன். கவலை வேண்டாம்.

தங்கள்
ராமகப்பு

அதைப் படித்தவுடன் நீண்ட பெருமூச்சு விட்டார் ராமகப்புவின் தந்தை.



மருந்து சாப்பிடுகிறவர்:—இந்தாங்க...டாக்டர் கொடுத்தாரு. இந்தக் கடிதாசுக்கு மருந்து கொடுங்க!

கம்பவுண்டர்:—இதில் ஒன்றும் மருந்து எழுதவில்லை, ஐயா! நமக்குச் சேரவேண்டிய பணத்துக்குப் பில் கொடுத்திருக்கிறார் டாக்டர்!

மருந்து சாப்பிடுகிறவர்:—சரி, அதைத்தான் கொடுங்க!

"என்ன? வேலை கிடைச்சுடுத்தா? அதற்காக இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் காசியாத்திரைக் கோலத்துடனேயா ஓடுகிறது?" என்றாள் தாயார்.

"காசி யாத்திரைக்காகத் தானே தடியும் குடையுமாகக் கிளம்பினான்? நிஜமாகவே காசிக்குப் போய்விட்டான், போ!" என்றார் தந்தை.

"மேலே என்ன செய்கிறது? சொன்னால் தேவலையே!" என்று கவலையுடன் கேட்டார் சம்பந்தி.

ராமகப்புவின் தகப்பனாருக்கு என்ன பதில் சொல்வது என்றே புரியவில்லை. "என்ன செய்கிறது?" என்ற கேள்வியை அவரும் திருப்பிக் கேட்டார்.

"என்ன செய்கிறது? அடுத்த 'பிளேனி'ல் நீங்களும் நானும் கிளம்பிக் காசிக்குப் போய் மாப்பிள்ளைப் பையனைத் தேடிப் பிடித்து, "கோபம் வேண்டாம், மாப்பிள்ளை! பெங்களூருக்கு வந்து என் பெண் கோமதியைக் கல்யாணம் பண்ணிண்டு கிரஹஸ்தாஸ்ரமம் நடத்துங்கள்' என்று கேட்டுக் கொள்கிறது" என்றார் சாஸ்திரிகள். அதற்கு 'ஆமாம்' சொல்வதைப் போல் எல்லோரும் 'கொல்' லென்று சிரித்தார்கள்.




### எகிப்து — 3

அராபியர்கள் எகிப்தை ஆக்கிரமித்துக் கொண்ட பின் அந்த நாட்டில் இஸ்லாம் மதமும் முஸ்லிம்களின் பழக்க வழக்கங்களும் பரவத் தொடங்கின.

1096-ம் ஆண்டிலிருந்து சுமார் இரண்டு நூற்றுண்டுகள் வரையில் நடந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற மதப் போரினுல் (Crusades) கூட எகிப்தில் அராபியர்களின் ஆட்சிக்கு எவ்விதப் பாதகமும் ஏற்படவில்லை. முஸ்லிம்களின் மீது மதப் போர் தொடாந்த கிறிஸ்துவர்கள் எகிப்து தேசத்தின் மீதும் படையெடுத்தார்கள். எனினும் அவர்களால் அராபியர்களின் ஆதிக்கத்தை முறியடிக்க முடியவில்லை.

இவ்வாறாக 1517-ம் வருஷம் வரையில் பல்வேறு ஆசியா சம்ராஜ்யங்களின் கீழ் இருந்து வந்த எகிப்து இறுதியாகத் துருக்கி சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்தில் வந்தது. 1798-ம் ஆண்டிலே நெப்போலியன் எகிப்து மீது படையெடுத்ததிலிருந்து எகிப்தில் துருக்கியர்களின் ஆதிக்கம் முடிவுற்றது எனலாம். எனினும் பெயரளவில் அங்கு 1914-ம் வருஷம் முதலாவது மகாயுத்தம் ஆரம்பமாகும் வரையில் துருக்கியின் ஆதிக்கம் நீடித்திருந்தது.

எகிப்தில் நெப்போலியன் பிரவேசித்த பின்தான், அந்த நாட்டின் கேந்திர ஸ்தானத்தைப் பிரிட்டிஷார் உணர்ந்தார்கள். கீழ்த் திசையில் உள்ள சகல நாடுகளுக்கும் எகிப்து வாசற்படியாக அமைந்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டார்கள். எனவே, 1801-ம் ஆண்டில் அவர்கள் பிரஞ்சுக்காரர்களிடமிருந்து எகிப்தின் நிர்வாகத்தைக் கைப்பற்றினர்கள்.

எனினும் அந்த நாட்டில் பிரிட்டிஷாரின் பூரண ஆதிக்கம் ஏற்படுவதற்கு ஒருவர் முட்டுக் கட்டையாக இருந்தார். அவர்தான் முகமது அலி என்ற துருக்கியர். எகிப்தின் கவர்னராக இருந்த அவர் பிரிட்டிஷ் துருப்புகளைத் தோற்கடித்து விட்டு, தாம் எகிப்தின் எஜமானராக விளங்கினர். நவீன எகிப்தை உருவாக்கிய பெருமை அவருக்கே உரியது. அவர் எகிப்து இராணுவத்தைச் சிருஷ்டித்ததுடன், எகிப்தில் பருத்தி உற்பத்தி அபரிமிதமாவதற்கும் தகுந்த முறைகளைக் கைக் கொண்டார். பருத்தி உற்பத்தியில் இன்று எகிப்து உலகத்திலேயே முக்கிய ஸ்தானம் வகிப்பது இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடத் தக்கதாகும்.

முகமது அலி 1849-ல், தமது எண்பதாவது வயதில் காலமானர். அவருக்குப் பின் அதிகாரத்துக்கு வந்தவர்களுக்குப் போதிய உறுதியும், திறமையும் இல்லை. எனவே அவர்களால் ஐரோப்பியர்களின் தந்திர முறைகளை எதிர்த்து நின்று எகிப்தைக் காப்பாற்ற முடியவில்லை.

அவர்களுக்கும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் பிரிட்டிஷார் அமித வட்டிக்கு ஏராளமான தொகை கடனாகக் கொடுத்தனர். அவர்களால் மேற்படி தொகையைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. எனவே அந்தத் தொகையை வசூல் செய்ய வேண்டும் என்ற காரணத்தைச் சொல்லிக் கொண்டு, பிரிட்டிஷார் எகிப்துக்குப் போர்க் கப்பல்களைக் கொண்டு வந்தார்கள்.

எகிப்தியத் தலைவர்கள் திறமையற்றவர்கள் என்றும், அதனல் அந்த நாடு பாப்பராகி விட்டது என்றும் பிரிட்டிஷார் கூறினர். இவர்களின் கூற்று ஆதாரமற்றது என்பதை அப்போது லண்டன் ''டைம்ஸ்'' பத்திரிகையே எடுத்துக் காட்டியது. ''எகிப்து ஆச்சரியகரமாக அபிவிருத்தி அடைந்திருக்கிறது. மற்ற

நாடுகள் ஐந்நூறு ஆண்டுகளில் எவ்வளவு முன்னேற்றம் அடையக் கூடுமோ, அவ்வளவு முன்னேற்றம் எகிப்தில் எழுபதே வருஷங்களில் ஏற்பட்டிருக்கிறது" என்று 1876-ம் வருஷம் ஜனவரி மாதத்திய இதழ் ஒன்றில் டைம்ஸ் பத்திரிகை குறிப்பிட்டிருந்தது.

ஆனால் பிரிட்டிஷாரும் பிரஞ்சுக்காரர்களும் எகிப்தில் ஏதோ நெருக்கடி ஏற்பட்டு விட்டதாகச் சொல்லிக் கொண்டு எகிப்து விவகாரங்களில் தலையிட முற்பட்டார்கள். இதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. இந்தியாவுக்குச் செல்லும் வழியிலே கேந்திர ஸ்தானத்தில் இருக்கும் எகிப்து விஷயத்தில் பிரிட்டிஷார் தலையிடாமல் இருந்திருந்தால்தான் ஆச்சரியப்பட வேண்டியிருக்கும்.

* * *

இந்தச் சந்தர்ப்பத்தில்தான், செங்கடலையும் மத்தியதரைக் கடலையும் இணைக்கும் சூயஸ் கால்வாய் வெட்டப்பட்டது. இதன் காரணமாக ஐரோப்பா - ஆசியா - ஆஸ்திரேலியா வர்த்தகப் போக்குவரத்தில் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டது. அதுவரையில் ஆயிரக் கணக்கான மைல் தூரத்துக்கு ஆப்பிரிக்காவைச் சுற்றி வளைத்துக் கொண்டு சென்ற கப்பல்கள் எல்லாம் சூயஸ் கால்வாய் வழியாகச் செல்ல ஆரம்பித்தன. அதனால் உலக நாடுகளிடையே எகிப்தின் மதிப்பும் செல்வாக்கும் அதிகமாயின.



எகிப்தியத் தாயும் குழந்தையும்

இந்தியாவிலும் மற்ற ஆசிய நாடுகளிலும் தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொள்வதற்கு எகிப்தும் சூயஸ் கால்வாயும் இன்றியமையாதவை என்பதைப் பிரிட்டிஷார் உணர்ந்தனர். அவ்விரண்டையும் தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக் கொள்வதற்கான தந்திரங்களைக் கையாண்டு, அந்த முயற்சியில் அவர்கள் பூரண வெற்றியும் பெற்றனர்.

எகிப்தில் பிரிட்டிஷ் முதலாளிகளின் தலையீடு அதிகமாவதை எகிப்தியர்கள் விரும்பவில்லை. எனவே, அந்த நாட்டிலிருந்து அன்னியர்களின் செல்வாக்கை அறவே ஒழிப்பதற்காக எகிப்து தேசியவாதிகளின் கட்சி உருவாயிற்று.

அந்தக் கட்சிக்கு அரபி பாஷா தலைமை வகித்தார். அவர் ஏழைத் தொழிலாளர் குடும்பத்தில் பிறந்தவர். எகிப்து இராணுவத்தில் சாதாரண சிப்பாயாகச் சேர்ந்த அரபி பாஷா தம்முடைய சலியா உழைப்பினாலும் திறமையினாலும் எகிப்து யுத்த மந்திரி பதவிக்கு வந்தார்.

எகிப்தில் பிரிட்டிஷாரும் பிரஞ்சுக்காரர்களும் சட்டாம்பிள்ளைகளாக இருப்பதை அவரால் சகிக்க முடியவில்லை. அவர்களின் கட்டளைக்கு இணங்க எகிப்து சர்க்கார் நிர்வாகம் நடப்பதையும் அவர் விரும்பவில்லை. எனவே அவர்களுடைய உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய அரபி பாஷா மறுத்து விட்டார்.

எகிப்தில் எவ்வாறு தங்களுடைய சர்வாதிகாரத்தை ஏற்படுத்துவது என்று துடித்துக் கொண்டிருந்த பிரிட்டிஷாருக்கு, அரபி பாஷாவின் 'முரட்டுத்தனம்' ஒரு வரப்பிரசாதமாக அமைந்தது. அரபி பாஷா கீழ்ப்படிய மறுத்ததற்காகப் பிரிட்டன் எகிப்து நாட்டின் மீது போர் தொடர்ந்தது!

1882-ம் வருஷம் பிரிட்டிஷ் போர்க் கப்பல்களின் பீரங்கிகளால் அலெக்ஸாண்டிரியா நகரம் தகர்க்கப்பட்டு எரிந்தது. அப்போது நடந்த யுத்தத்தில் எகிப்தியத் துருப்புகள் தோல்வியடைந்தன.

உடனே பிரிட்டிஷார் எகிப்தில் தங்களுடைய 'ஏஜண்டை' நியமித்தனர். அந்த ஏஜண்ட் எகிப்தின் சர்வாதிகாரியாக விளங்கினார். இந்தியாவில் பிரிட்டிஷ் வைஸ்ராய்க்கு எவ்வளவு அதிகாரம் இருந்ததோ, அவ்வளவு அதிகாரம் எகிப்தில் நியமிக்கப்பட்ட பிரிட்டிஷ் ஏஜண்டுக்கு அளிக்கப்பட்டது.

மேஜர் பாரிங் (லார்டு க்ரோமர்) என்பவர் எகிப்தில் பிரிட்டிஷாரின் முதலாவது ஏஜண்டாக நியமிக்கப்பட்டார். அவர் இருபத்தைந்து வருஷ காலம் எகிப்து தேசத்தின் முடிசூடாக் கொடுங்கோல் மன்னராக விளங்கினார்.

அவரது சலுகை காரணமாக எகிப்தில் பிரிட்டிஷ் முதலாளிகள் தங்களுடைய பிடியைப் பலப்படுத்திக் கொண்டார்கள். இவ்வாறாக லார்டு க்ரோமரின் ஆட்சியில் எகிப்து 'அபிவிருத்தி' அடையலாயிற்று!

# தொல்லைப்படுத்தும் பூச்சிகளைக் கொல்லுங்கள்

....அவை மலேரியா, டைபாய்ட், வயிற்றுக் கடுப்பு, காலரா மற்றும் அநேக வியாதிகளைப் பரப்புகின்றன!

ஈ, கொசு, கரப்பு, மூட்டைப்பூச்சி இவை துரிதமாக விருத்தியாகின்றன. சேற்றில் வாழும் இந்த ஜந்துக்கள் உங்கள் வீட்டிற்கு நோய்க் கிருமிகளைக் கொண்டுவந்து உங்கள் உயிருக்கே உலைவைக்கக் கூடும். ஒரே ஈயில் 60,00,000க்கு மதிகமான கிருமிகள் காணப்பட்டுள்ளன!

பூச்சி சிறியதாயும் சாதுபோலவும் தோற்றமளித்தபோதிலும், அது உங்கள் உயிருக் காபத்து விளைவிக்கலாம்.

எல்லாப் பூச்சிகளையும், அவை உங்களிடையே நோயைப் பரப்புமுன் கொல்லுங்கள்! ப்ளிட்டிலிருக்கும் 5 கொடிய டோக்ஸினிகள் எல்லாப் பூச்சிகளையும் துரிதமாகவும் நிச்சயமாகவும் கொல்லுகின்றன.




ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

# மகிழ்ச்சி தரும் தீர்மானம்.



தாய் தான் குழந்தைக்கு கொடுக்க கிளாக்ஸோவை தேர்ந்தெடுத்தது ஒரு மகிழ்ச்சி தரும் தீர்மானம். ஏனென்றால் குழந்தையின் ஆரோக்கியத்தையும், உடல் நலத்தையும் மேம்படச் செய்ய உதவும் ஆதர்ச உணவு கிளாக்ஸோ. மிகவும் சிறந்த பசுவின் பாலிலிருந்து யாரிக்கப்பட்ட கிளாக்ஸோவில் விடமின் டி, இரும்பு இவைகளுக்குப் புறமே திடமான சதை, உறுதியான எலும்புகள், ஒழுங்கான பற்கள் இவைகள் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா சத்துக்களும் சேர்ந்திருக்கிறது. அன்றியும் கிளாக்ஸோ எளிதில் ஜீரணமாகிறது. அதனால் குழந்தைக்கு நல்ல தூக்கத்தையும், திருப்தியையும் திண்ணமாக அளிக்கிறது.




சில்லறை விற்பனை விலைகள்:
1 பவுண்டு - ரூ. 3/11/-
2 பவுண்டு - ரூ. 7/-

**Glaxo**

## கிளாக்ஸோ சிறுகுழந்தைகளுக்கான முதல் உணவு

கிளாக்ஸோ லேபரட்டரீஸ் (இந்தியா) லிட். பம்பாய் • கல்கத்தா • மதராஸ்

 LAS. (8)

CT/7

# டி லக்ஸ் — தாகத்

## சைக்கிள் டயர்களையே வாங்குங்கள்

குறைந்த விலையில்
உயர்ந்த ரக டயர்கள்




# குட் இயர்

**GOODYEAR**

மற்ற எந்த டயர்களையும் விட குட் இயர் டயர்களில் தான்
உலகத்திலேயே அதிக ஜனங்கள் சவாரி செய்கிறார்கள்

# Doric

# டோரிக்

சிறந்த பிரயோசனமுள்ள

## பேனாக்கள்

ரெகுலர் ரூ. 6/-



லீவர் - பில்லர்

ரூ. 6-8

1. இந்த அளவிலேயே உள்ள மற்றபேனாக்களைவிட அதிகமான மசியை கொள்கிறது.
2. மசிகசிந்து ஒழுகாமலிருக்குமாறு உத்தரவாத முள்ளது
3. தங்கமுலாம் பூசிய இரிடியம் தோய்ந்த உறுதியான நிப்.
4. அநேகவித கவர்ச்சிகர அழகிய கலர்களில் உள்ளன.
5. இது ஒரு டோரிக் தயாரிப்பு



டோரிக் பேனா சரிவர எழுதாவிட்டால் எங்களுக்குத் திருப்பி அனுப்புங்கள். இலவசமாக [illegible] பதில் பேனா அனுப்புகிறோம்.

எல்லா டீலர்களிடமும் கிடைக்கும் அல்லது

**டோரிக் ப்ராடக்ட்ஸ்**

பம்பாய்: பம்பாய் மியூச்சுவல் பில்டிங், ஹார்ன்பி ரோடு — பம்பாய்.
கல்கத்தா : 10, சௌரிங்கி.
பெங்களூர் : 2, சவுத் பரேட்.



# நோய்க்குப் பிறகு துரிதமாக

## தேர்வு பெற!




ஜுரத்தால் பலவீனமும், சோர்வும் அடைந்திருந்தால், உடல் தேறுவதற்கு ஒவல்டினைவிடச் சிறந்த டானிக் கிடையாது. இந்த ருசியான உணவுப் பானம் சுலபமாக ஜீரணமாவதுடன், உடல் தேர்வுக்கு வேண்டிய பிரத்யேக சக்தி தரும் சயிலே உணவுமாகும். அதில் அத்யாவசியமான வஸ்துக்களான பசுவின் கெட்டுப்பால், பழுத்த பார்லி மால்ட், கோக்கோ, இயற்கையான பாஸ்பேட்டுகள், பி & டி விடமின்களும் சேர்க்கப்பட்டு சாஸ்திரியமாக தயாரிக்கப்பட்டதாகும். ஒவல்டினில் இருக்கும் போஷணை மற்றும் விடமின் சத்துக்களும் இன்றியமையாதவை. ஒவல்டினைப் போலச் சிறந்தது வேறு கிடையாது.

டாக்டர்கள் நோய்க்குப் பிறகு உடல் தேற ஒவல்டினை சிபார்சு செய்கிறார்கள். இன்றியமையாத டானிக் உணவு—பானம்—போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள்: ரொஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




# ஒவல்டின்

சுகவீனத்திலிருந்து ஆரோக்கியத்திற்கு!

OV 374

